# தூய கன்னிமரியாளின் விண்ணேற்பு விழா










மருத மடு மாதாவின் பதியில் வரலாறு காணாத ஆவணி மாத திருவிழாவில் அடை மழை பொழிந்து வெள்ளப்பெருக்கு எடுத்து மக்கள் அவலம் அதிகரித்த படியால் 14-08-2017 வேஸ்ப்பர் இரத்து செய்யப்பட்டது 15-08-2017 திருவிழாப் பூசை நிறைவு செய்யப்பட்டது ஐந்து இலச்சம் மக்கள் பங்கு கொண்டார்கள் மருத மடு அன்னையே எங்களக்காகவும் வேண்டிக் கொள்ளும்.

ஆண்டவரே இயேசுவே, நீர் இந்த உலகில் மனிதனாக பிறப்பதற்கு அன்னை மரியாளை தாயாக தெரிந்து கொண்டீரே, அன்னை மரியாள் அந்த உயரிய அழைப்பை பெற்ற பின்னரும், தாழ்ச்சியோடு வயது முதிர்ந்தவரான எலிசபேத்துக்கு உதவி செய்ய விரைந்து சென்றாளே, என் வாழ்விலும் தாழ்ச்சியை அணிந்து கொள்ள எனக்கு உதவி செய்யும். அவள் தன்னை தாழ்த்தியபோது தூய ஆவியால் உயர்த்தப்பட்டாளே, பெண்களுக்குள் பாக்கியவதியாக மாற்றினீரே, இறைவனாகிய உமது தாயாக தெரிந்து கொண்டீரே, எல்லாவற்றுக்கும் மேலாக அவள் இறந்தபோது அவளுடைய உடலையும் ஆன்மாவையும் விண்ணுலகிற்கு எடுத்துச்சென்றீரே. இறுதிநாளில் எல்லா விசுவாசிகளுக்கும் அந்த பாக்கியத்தை தரவுள்பவரே, என்னை அதற்காக தயார்ப்படுத்த உதவி செய்யும். அன்னை மரியாள் தனது எல்லா துன்பங்களையும் தாங்கிய படி உம்மோடு நடந்து இறை சித்தத்தை நிறைவேற்றியது போல என் வாழ்விலும் உம் சித்தத்தை நிறைவேற்ற உதவும். உமது தூய ஆவியின் எல்லாவரங்களையும் என் மேல் பொழியும். உமது நற்செய்தி பணியாளனாக என்னை பயன்படுத்தும். இந்த உலகில் உமது நற்செய்தியை அறிவிக்கும் ஒவ்வொரு திருச்சபைகளையும் ஆசீர்வதியும். எல்லா சபைகளிடையேயும் ஒற்றுமையை தாரும். எல்லா சபையினரும் ஒருங்கிணைந்து செபிக்கும் பாக்கியத்தை தாரும். இந்த நாள் முழுவதும் கூட இருந்து வழி நடத்தும். இயேசு என்னும் ஒரே பரிசுத்த நாமத்தில் செபிக்கிறேன். ஆமேன்.

## ஸ்தாபிதம்

ஆனிமாதம் 1995

முகவரி
2625 Eglinton Ave EastUnit # 2nd floor
Scarborough. On. M1K 3S2

E-mail:- Tamilcatholicpublication@gmail.com

தொலை பேசி (416) 265-5540
தொலைநகல் (416) 264-6353

தயாரிப்பு +வெளியீடு
தமிழ்க் கத்தோலிக்க வெளியீட்டகம்..

ஆசிரியர் குழு
திரு தோமாஸ் டேவிட்
அருட் தந்தை ஜெயசீலன் பிரான்சீஸ்
அருட் தந்தை யேசுறாஜன் மரியதாஸ் சகோதரி
மரினா அந்தோனிப்பிள்ளை

ஆலோசனைக் குழு
அருட் தந்தை அந்தோனிப்பிள்ளை தோமாஸ்
அருட் தந்தை ஹமலதாசன் அன்ரனி
பண்டிதர் அலெக்ஸ்சாந்தர் செல்வராசா
அருட் தந்தை வார்கிஸ் சகாயறாஜா

தொழில் நுட்ப உதவி
திரு குணரெட்னம் நாகமுத்து
திருமதி யூலிற் வசந்தா குணரெட்னம்

விநியோகஸ்த்தர்கள்
கனடாத் தமிழ் கத்தோலிக்க தன்னார்வத்
தொண்டர்கள்.

கிடைக்கும் இடங்கள்
ரொறொன்ரோவில்:-
புனித அந்தோனியார் தேவாலயம்
லூர்துமாதா தேவாலயம்

ஸ்காபரோ:-
புனித மரிய கொறற்றி தேவாலயம்
தோமாஸ்மோர் தேவாலயம்
பர்ணபாஸ் தேவாலயம்

ஜேன்ரூபிஞ்
புனித ஒகஸ்ற்றின் தேவாலயம்

மிஸிசாக்காவில்:-
சிற்றி சென்றர் வியாபார ஸ்தாபணங்களில்

டொன்மில்ஸ்:-
புனித 23ம் அருளப்பர் தேவாலயம்

தமிழ் கத்தோலிக்க புதுவாழ்வுக் குழு

தமிழ் மொழிகற்கும் வகுப்புகள்
மெக்கா சிற்றி வர்த்தக ஸ்தாபனங்கள்

ஆதரவு

கனடாத் தமிழ் கத்தோலிக்க சங்கம்.


ஆசிரியர் உரை



### மரியாளின் விண்ணேற்பு

இறைவன் வார்த்தையை வரவேற்போம் விண்ணகவலிமையை பெறுவோம். இப்போது அவர் தம் திரு மகனின் மகிமையில் முழுமையாய் பங்கு கொள்கின்றார். அன்னை மரியா இவ்வுலகில் தமது வாழ்வினை முடித்த நேரத்தில் தம் மகனால் மகிமைப்படுத்தப் பட்டதை ஆவணி மாதம் 15ம திகதி திருச்சபை மகிழ்ச்சியுடன் கொண்டாடிமகிழ்கின்றது. அன்னையை முதல் வாசகம் தீமைக்கு எதிராகத் தினமும் போரட்டம் நடத்தும் திருச்சபைக்கு பதிலாளியாக அன்னை மரியாளை குறிப்பிடுகின்றது. பறவை நாகத்துக்கு எதிராக எழுந்துள்ளதும் இந்த அன்னை மரியாதான் இந்தப் போராட்டத்தின் வெற்றி அவருடைய மகன் இறைவன் இயேசுவேதான் மேலும் விசுவாசித்தவர் பேறு பெற்றவர். கன்னிமரியின் மகிமைக்கு ஊற்றாக இருப்பது இறைவனின் வார்த்தையை அவர் முழுமையாக ஏற்று விசுவசித்ததே! தம் வயிற்றின் கனியான இயேசுவோடு இணைந்து மனித விடுதலைக்குத் தன்னை ஒப்புக்கொடுத்த தாய்மரி விடுதலையின் மகிமையில் தன் மகனுக்கு அடுத்தபடியாக பங்கெடுப்பது நியாயமானதே! உரிமைக்கீதம் பாடிய தாய் மரி நம் உணர்வுகள் எல்லாம் அறிந்தவர்தான். பிள்ளைகளாகிய நாமும் அவரது வழியில் மீட்படைவதே அவரது விருப்பமும் ஆகும்..

உலகில் மரியாளின் விண்ணேற்பு விழா கத்தோலிக்க திருச்சபை, அங்கி லிக்கன் திருச்சபை, ஒத்தடக்ஸ் திருச்சபை மேலும் கிறிஸ்த்தவ குழுக்கள் போன்றோர் ஆவணிமாதம் 15ம் திகதி அன்னை மரியாளின் விண்ணேற்பு விழாவைக்கொண் டாடுகிறார்கள் அது மட்டும் அல்ல பல நாடுகளில் ஆவணி மாதம் 15ம் திகதி கட்டாய விடுதலை நாளாகவும் பிரகடணம் செய்துள்ளார்கள் காரணம் இறைவன் இயேசுவின் தாய் அன்னை மரியா பிறந்தார் வாழ்ந்தார் இயேசுவின் அப்போஸ்த்தலர்கள் கூடியிருந்த போது இறந்தார் என்றும் ஆனால் அந்த நேரம் புனித தோமாஸ் அங்கு பிரசன்னமாக இல்லாத படியால் அவரது விருப்பத்திற்கு அன்னை மரியாளின் பேழையை திறக்க நேர்ந்தது என்றும் அப்போது அன்னையின் உடலும் உள்ளமும் எடுத்துச் செல்லப்பட்டதை அப்போஸ்தலர் அறிந்து கொண்டார்கள் என்றும் அன்னை மரியாளின் சரித்திரம் கூறுகின்றது.

ஆகவே முதலாம் நூற்றாண்டு தொடக்கம் இன்று வரையும் அன்னையானவள் விண்ணுலகில் இருந்து மண்ணுலகம் வந்து அவ்வப்போது சிறுவர்களைச் சந்தித்து அவாகளிடம் சமாதானம் என்றும், செபமாலையென்றும், தான் அமலோற்ப நாயகி என்றும் பலதரப்பட்ட செய்திகளை பரிமாறி வருகிறார். வேளாங்கன்னியில் ஒரு சிறுவனுக்கு பால் வார்த்து அவன் முடமையை நீக்கினார். லூர்துதன்னை பதியில் ஆடு மேய்த்த பேர்னபேத்தம்மாளினிடம் காட்சி கொடுத்து செபம் செய்ய கேட்டது மட்டுமல்லாமல் அவவின் உடல் இன்று வரை அழியாது பாதுகாக்கப்பட்டு வருகிறது. பாத்திமாவில் மூன்று சிறுவர்களுக்கு தோன்றி காட்சி கொடுத்தது மட்டுமல்லாமல் தான்தான் அமல உற்பவ நாயகி என்று பகிரங்ப்படுத்தியதுடன் பரலோகம் வரச் செபமாலை செய்யுங்கள் என்று கேட்டுக்கொண்டார். அவர்களின் இரண்டு பேருக்கு புனித பட்டம் 13.05.2017ல் வழங்கப்பட்டதை அறிவீர்கள் அத்துடன் மருத மடுவில் ஒவ்வொரு வருடமும் ஆவணி மாதம் 15ம் திகதி விண்ணேற்பு விழா தேசியத் திருவிழாவாகக்கொண்டாடப்படுகிறது.

எல்லா பெண்களும் தாய்மைப் பேறு அடைவது இயல்புதான் ஆனால் அந்தப் பேற்றைத் தரும் இறைவனுக்கே தாயாகும் பேற்றை மரயாளுக்கு தர தேர்ந்த்தெடுத்ததோடு, அந்தப் பேற்றை அந்தத் தாய் உலக மீட்பிற்காக தியாகம் செய்ததால் இறைவன் தரும் மாட்சிமைதான் மரியாளின் விண்ணேற்பு என்ற நம்பிக்கையுடன் கூடிய வாழ்வை வரமாகக் கேட்டு செபமாலையை முடியுமானளவு ஓதி ஒப்புக்கொடுத்து விண்ணேற்பு வாழ்வுக்கு நம்மை ஒப்புக்கொடுப்போம்.

நிர்வாக ஆசிரியர்.
மறைபணி தோமாஸ் டேவிட்

## பற்றிமாதா புதுமைகள் 100வது ஆண்டு நிறைவு.




ஐரோப்பிய கண்டத்தில் நூறு வருடங்களுக்கு முன்பு மூன்று சிறுவர்கள் போற்றுக்களில் உள்ள பற்றிமா நகரில் தொடர்ந்து 18 முறை புதுமையின் மூலம் மாதாவை நேரடியாகத் தரிசித்து உலகத்திற்கு வழங்கப்பட்ட செய்திகள் பல நிறைவேற்றம் கொண்டிருக்கும் இவ்வேளையில் புதுமைகள் கண்ட மூன்று பேரில் இரண்டுபேருக்கு கத்தோலிக்க திருச்சபை இந்த ஆண்டு புனித பட்டம் வழங்குவதற்காக பற்றிமா மாதாவின் புதுமைகள் 100 ஆண்டு நிறைவு நாளான 2017ம் ஆண்டு மே மாதம் 13ம் திகதியாக தேர்ந்துகொண்டது.

ஆகவே தமிழ்கத்தோலிக்க வெளியீட்டகம் நடத்தும் ஆசிரியர் மறை பணி திரு. தோமாஸ் டேவிட் அவர்கள் இவ்வாண்டின் திருவிழாவில் பங்கெடுக்க ஆயத்தம் செய்து கொண்டார். பற்றிமா மாதாவின் புதுமைகள் 100வது நிறைவு திருயாத்திரை என்று பெரிட்டு மறைபணி திரு.தோமாஸ் டேவிட் அவரின் தலைமையில் 243வது திருயாத்திரையை நடத்த சகல ஆயத்தங்களும் செய்யப்பட்டது. பக்தர்களின் தனிப்பட்ட வேண்டுதலுக்காக இணைந்து கொண்ட பக்தர்களுடன் சேர்ந்து நாற்பது பேர் ரொறொன்ரோ பியசன் விமானத்தில் இருந்து புறப்பட்டு பிரான்ஸ் நாட்டின் தலைநகர் பரிசில் சேர்ந்து அங்கே எங்களுக்காக ஜேர்மன் நாட்டிலிருந்து தயாக எமது சகோதரன் ரஞ்சித்தினால் ஒழுங்கு செய்யப்பட்டிருந்த சொகுˆ பேரூந்து வண்டியில் புறப்பட்டு லாச்சப்பல் என்ற இடத்தில் எங்களுடன் இணைய இருந்த மேலும் இரண்டுபேரையும் இணைத்துக்கொண்டு மதிய உணவை முடித்துக் கொண்டு புறப்பட்டோம்.




வைட் தேவாலயம் பார்வையிட சென்றோம். அது ஒரு மலை உச்சியில் அமைக்கப்பட்டிருந்தது. இறை பக்தர்களின் கூட்டம் பெருகிய வண்ணம் இருந்தது மலை அடிவாரத்தில் நின்று பலர் ஆலயத்தை நோக்கி தங்களுடைய விண்ணப்பங்களையும் வேண்டுதல்களையும் சமர்ப்பித்து விட்டு அழகு நிறைந்த அற்புதமான காட்சிகளை பார்வையிட்டனர். அங்கு தெய்வீக பிரசன்னத்தை உணரக்கூடியதாக இருந்தது. அங்கு இருந்த சுரூபங்களை பார்க்கும் போது அருட்சியும் அருளும் பெருகியதைக் காணக்கூடியதாக இருந்தது. அதனைத் தொடர்ந்து ஈக்கல் ரவர் என்று அழைக்கப்படும் உலக அதிசய கோபிரத்தையும் பார்வையிட்டோம். அத்துடன் பேரூந்தில் இருந்தவாறே நெப்போலியன் குலோசியம் மற்றும் பரிசில் அமைந்திருக்கும் அழகான அரச கட்டிடங்கள் பரிசை ஊடறுத்து செல்லும் ஆறு அமைந்திருக்கும் வடிவங்களையும் அவற்றில் பிரயாணம் செய்யும் நீர் படகுகளையும் சுற்றிப்பார்வையிட்டு அங்கிருந்து நாம் நேவர்ஸ் என்று அழைக்கப்படும் நகரத்துக்குச் சென்றோம்.

லூர்துமாதா பதியில் தேவமாதாவின் புதுமைகளை நேரடியாகக்




கண்டு வெளிப்படுத்திய பிறகு நேவர்ஸ் என்ற இடத்தில் கன்னியர் மடத்தில் சேர்ந்து வாழ்ந்து 1879ஆம் ஆண்டு இறந்து 35து வருடங்களுக்கு பிறகு 1904ம் ஆண்டு பெர்னபேத்தம்மாவின் உடல் அவரை அடக்கம் செய்யப்பட்ட கிடங்கில் இருந்து அழியாமல் எடுக்கப்பட்டது. இன்று வரை அங்குள்ள தேவலயத்தில் வைக்கப்பட்டுள்ளது. அங்கேதான் புனித பெர்னபேற்தம்மாள் வாழ்ந்த இறந்த இடம் அவர்களின் உடல் அழியாமல் நூற்றி முப்பத்தாறு ஆண்டுகளுக்கு மேலாக இருக்கின்றது. அந்த விடுதியில் தான் பக்தர்கள் நாம் இரவு தங்கி அமைதியான இல்லத்திலே அமைதியாக நித்திரை செய்தோம். அடுத்த நாள் எழுந்து அதிகாலையில் உணவு முடிந்ததும் பெர்னடேற்த்தம்மாள் இருந்து வாழ்ந்த வாழ்க்கைச் சரிந்திரங்கள் நிறைந்த வரலாற்றுச் சுருக்கங்களையும். அதற்கான சாட்சியங்களையும் நேரடியாகப் புனித பெர்னடேற்ம்மாவின் விடுதியில் உள்ள அருட் சகோதரி மூலம் விளக்கம் அளிக்கப்பட்டது. அத்துடன் அங்கும் லூர்து அன்னை பதியில் உள்ள கெபிபோன்று ஒரு சிறிய கெபி ஒன்று உண்டு. அவற்றில் நின்று படங்கள் எடுத்து அங்கு இருந்து புறப்பட்டோம்.

புனித லூர்து அன்னை திருத்தலத்தை நோக்கி எமது ஆன்மீகத் திருயாத்திரை பேரூந்தில் திருப்பயணிகள் திருச் செபமாலை ஓதுவதும் அன்னைக்குரிய பாடல்களைப் பாடிப் புகழ்ந்து ஆர்ப்பரித்து 8 மணிநேரம் எமது புனித லூர்தன்னை திருத்தலம் செல்லும் வழியில் பச்சைப் பசேர் என்ற கண்ணுக்கு



குளிர்ச்சியான புல் வெளிகளையும் மலைச் சாரல்களையும் மலை அருவிகளையும் நீர் வீழ்ச்சிகளையும் இயற்கையின் அழகையும் நினைக்கும்போது அன்னையின் அரவணைப்பும் அன்பும் பாதுகாப்பும் எம்மை வழிநடத்தியதை உணர்ந்து பேர் உவகை அடைந்து செபித்தும் பாடியும் மகிழ்ந்தோம். அத்துடன் பதிநோராம் நூற்றாண்டில் புனித அந்தோனியார் வாழ்ந்த தேவாலயமும் பார்வையிட்டு அங்கு இருந்து புறப்பட்டு லூர்து அன்னை பதியை வந்தடைந்தோம். அங்கும் நேவர்ஸ் ஹொட்டலில் தங்கி அங்கு நடந்த மெழுகுதிரிப் பவணியில் பங்கெடுத்து எங்களின் தமிழ் திருப்பயணிகளுக்கான ஆன்மீகக் குரு அருட் தந்தை. லீனஸ் சொய்சா அ.ம.தி லூர்தன்னை திருத்தலம் பிரான்ஸ் அவர்களையும் தரிசித்தோம். அப்பொழுது லூர்து அன்னைத்திருத்தலத்தில் ஒரு தமிழ் ஆன்மீகக் குருவானவராக கடந்த மூன்று வருடங்கள் பணிபுரிகிறார். அவரினால் அடுத்த மூன்று நாட்களும் எவ்விதம் நாம் அங்கு யாத்திரையை மேற்கொள்வோம் என்று அறிவுரைகள் வழங்கினார்.

அங்கு இரண்டாம் நாள் அனைவரும் அங்கு புதுமைகள் நிகழும்



அன்னையின் ஆசீர் நீரில் தோய்ந்து விட்டு லூர்துபதியின் வரலாறுககள் பற்றி தமிழ் திருப்பயணிகளுக்கான ஆன்மீகக் குரு அருட் தந்தை லீனஸ் சொய்சா அமதி அடிகளாரால் நான்கு மணி நேரம் வழங்கப்பட்ட லூர்தன்னையின் திருத்தலத்தின் விளக்கங்கள் பற்றி அறிவதற்கு அவரின் தலைமையில் நடத்தப்பட்டது. அப்போது மறை உண்மைகளின் பிரசன்ன தேவாலயத்தில் இருந்து இறைவன் இயேசுவின் மறை நிகழ்வுகளை அறிமுகம் செய்தார். மேலும் நிலத்தடியில் கட்டப்பட்டுள்ள சர்தேச நாடுகளின் தேவதாய் அவர்களின் விசுவாச அடையாளங்கள் வைக்கப்பட்ட ஆலயத்தை பார்வையிடும்போது நமது தமிழ் மொழியில் இயேசு கற்பித்த செபம் பரமண்டல மந்திரம் பொறிக்கப்பட்டதுடன் தேசிய திருயாத்திரை ஸ்தலமாகிய இலங்கை வன்னித்திருப்பதியில் அமைந்துள்ள மருத மடு அன்னை திரு உருவப்படத்துடன் வைக்கப்பட்டுள்ள இடத்தில் உலக சமாதானத்திற்காக செபித்து அங்கிருந்து வெளியேறி புனித பெர்ணபேற் அம்மாவின் வாழ்க்கை வரலாறும் வாழ்ந்த வீடும் அவர்களின் வாழ்வாதார தொழில் பட்டறைகளையும் பேர்னடேற்றும்மாளுக்கு எற்பட்ட சவாள்கள் வேதனைகள் சோதனைகள் போராட்டங்கள் மத்தியிலும் லூர்து அன்னைக்காக அர்ப்பணித்த தியாகச் செயல்கள் பல தடவைகள் காட்சிகள் கண்டு பெற்ற கண்டனங்களையும் அனைத்தையும் பற்றி அருட்தந்தை லீனஸ் சொய்சா அமதி அடிகளாரின் அற்புதமாக இறைவாஞ்சையோடு பக்தர்களின் மனதில் ஆழப்பணியும் படி லூர்தன்னையின் விசுவாசம் நம்பிக்கை



தாழ்சி ஆகியபுண்ணியங்களை பெறுகின்ற உணர்வுடன் எம் பக்தர்களுக்கு விளக்கம் அளித்தார. அத்துடன் லூர்தன்னைக்கு எப்பொழுதும் செபமாலை சொல்ல வேண்டுமென்றும் செபமாலை சொல்லும் போது எமது வேண்டுதல்களைப் பெற்றுக் கொள்ளலாம் என்றும் கூறினார். அத்துடன் பெரனபேற்றம்மாள் ஞானஸ்நானம் பெற்ற தேவாலயம் எரிந்து அவ்விடத்தில் ஞாபக தூபி மட்டும் இப்போது மிஞ்சி உள்ளது. அவ ஞானஸ்நானம் பெற்ற தொட்டி புனித பீற்றர் தேவாலயத்தில் வைக்கப் பட்டுள்ளது அங்கே எமது ஞானஸநானத்தைப் புதுப்பித்து அருட்தந்தையால் ஆசீர் வாதமும் வழங்கப்பட்டது. பின்பு விளக்கங்களின் விம்பங்களை கொண்ட ஒரு குருவானரின் தியாக உணர்வை வெளிப்படுத்தும் திரைப்படம் பார்த்தோம். அத்துடன் அன்றையதினம் நடந்த திருச் செபமாலை பவணியில் பங்கேடுத்தோம். லூர்தன்னையின் பக்தர்கள் நாம் ஒன்று கூடி ஒரே குடும்பமாக சேர்ந்து தாயின் மடியில் தலை சாய்த்திருந்தால் துயரம் தெரிவதில்லை என்பதற்கு ஒப்ப தாயின் சன்னிதானத்திலே பக்தர்கள் சரணடைந்து தங்கள் கவலைகள் கண்ணீர்கள் துயரங்கள் நோய் நொடி வியாதிகள் மனக்காயங்கள். மனவலிகள் மனப்பாரங்கள் இன்னும் பல குடும்ப தேவைகள் அனைத்தையும் மெழுகுதிரி பவணியில் பல மொழியினர் மத்தியில் பத்தாயிரத்திற்கும் அதிகமானவர்கள் இணைந்து கொண்ட பல மொழிகளில் லூர்தன்னையின் மாலை செப வழிபாட்டில் எமது குழுவினர் சார்பாக சகோதரி மரினா

அந்தோனிப்பிள்ளை அவர்களின் தலைமையில் ஒன்று கூடிய தமிழ் பக்தர்கள் தமிழில் மாசில்லா கன்னியே மாதாவே உன் மேல் நேசமில்லாதவர் நீசரே ஆவார் ஆவே ஆவே ஆவே மாறியா என்ற பாடலைப் பாடியும். அருள் நிறைந்த மரியாயே வாழ்க கத்தர் எம்முடனே என்ற செபமாலையும் சொல்லி உலகப் புகழ் பெற்ற தேவாலய நிகழ்வில் எம் தாயக பக்தர்கள் தமிழில் பாடியபோது செபித்தபோதும் பக்திப் பரவசத்தை உயர்த்தி எமது விசுவாச வாழ்க்கையை மெருகூட்டியது. அது எங்களுக்குக்கிடைத்த பெரும்பாக்கியம் என்றுதான் உணரக்கூடியதாக இருந்தது..

அடுத்த நாள் காலையில் புனித லூர்து அன்னை மாதா காட்சி கொடுத்து தேவாலயம் கட்டும்படி பேர்ணபேத்தம்மாவிடம் கேட்டு புதுமை நடந்த கெபிக்கு மேல் கட்டப்பட்ட தேவாலயத்தில் அருட் தந்தை லீனஸ் சொய்சா அவர்கள் தமிழில் திருப்பலி நிறைவேற்றி சிறப்பு ஆசீரையும் வழங்கினார். திருப்பலி முடிவில் அனைவரும் ஒன்று கூடி குழுவாகப்புகைப் படங்கள் எடுத்துக்கொண்டு இதன் பிறகு சிலுவைப் பாதை சுவடுகளைத் தரிசித்து செபித்தோம்.





ஸ்பையினில் இயேசுநாதர் வாழ்ந்த காலத்தில் அவருடன் வாழ்ந்த புனித யாகப்பர் அவர்களின் ஆலயம் சந்தியாகோ என்ற இடத்தில் கொம்போஸ்ரலாவில் இரண்டாயிரம் ஆண்டு வரலாற்று வயதுடைய ஆலயத்தை மூன்று தலைமுறை லோறன்ஸ் அரசர்கள் கட்டிய ஆலயத்தை பார்வையிட்டோம் அந்த தேவாலயத்தில் அமைந்திருந்த புனிதர்களின் ஓவியங்கள் சிறிய சிறிய ஆலயங்கள் ஆலயத்தின் நடுப்பகுதியில் அங்கு புனித யாகப்பரின் திருச்சுரூபம் பீடத்தின் இரண்டு மாடி கட்டிட உயரத்தில் வைக்கப்பட்டுள்ளது. பக்தர்கள் பின்பக்கமாக அவ்விடத்திற்கு ஏறி அவரை முத்தமிட்டு மரியாதை செலுத்தினர். அத்துடன் உலகிலே பெரிய தூப ஆராதனைக்கொலமும் யாகப்பர் ஆலயத்தின் மையப்பகுதியில் பல நிறை கொண்ட தூபக் கொலமாக வைக்கப்பட்டுள்ளது. அத்தூபத்தை விசேட நாட்களில் மட்டும் தான் ஆராதனை செய்வது வழக்கம் நாம் சென்ற திருயாத்திரையின் போதும் ஆயரின் தலைமையில் திருப்பலி ஒப்புக்கொடுக்கப்பட்ட பின்னர் 10 தன்னார்வத் தொண்டர்களால் அத்தூபத்தை தூளா போன்று ஆலயத்தின் திருப்பலி நடைபெற்ற இடத்திலிருந்து ஆயரினால் தூபத்தில் இருந்த நெருப்பிற்கு நறுமணம் நிறைந்த குமஞ்சான் பொட்டு ஆராதனை சடங்கு இடம் பெறும் போது ஆலயம் முழுவதும் தூப முகிலால் சூழந்து நறுமணம் வீசுவதை உணரும் போது உள்ளத் தூய்மை அடைந்தோம். அலபெரிய தூப ஆராதனை திருப்பலி பீடத்தில் நடை பெற்றதைக் முதல் முறையாகவே எம் கண்களால் காணக்கூடியதாக இருந்தது. அத்துடன் உள்ளத்தில் அமைதியும் அடைந்தோம். ஒரு இரவு தங்கி அங்கு இருந்து போற்றுக்கல் புறப்பட்டோம். போற்றுக்கலில் 60 இலட்சம் பக்தர்கள் பற்றிமா மாதாவை நோக்கி வந்தடைந்த வண்ணமிருந்தார்கள். எங்களது அதி'டம் நாங்கள் ஆலயத்திற்கு அருகாமையிலே 12ம் திகதி எமது பேரூந்து தரப்பிடம் செய்யவும் நாம் அங்குள்ள இடங்களை இழகுவாக பார்வையிடவும் வசதியாக அமைந்திருந்தது. பக்தர்கள் கூட்டம் மண் போட்டாலும் கீழே விழாமல் நெருக்கடியாக இருந்தாலும் பார்வையிட வேண்டிய இடங்களை பார்ப்பதற்கும் எமது பக்தர்களின் வேண்டுதல்களையும் விண்ணப்பங் களையும் அன்னையின் பாதத்தில் வைத்து சரணடைந்தார்கள். எங்களது வழிகாட்டியின் அனுபவத்தால் நாம் உட்புகுந்து மிகவும் சிரமங்கள் மத்தியிலும் பார்வையிட்டோம். எமது பக்தி முயற்சிகளையும் செபங்களையும் ஒப்புக்கொடுத் தோம். அங்கு நாம் பக்தர்கள் புண்ணிய பூமியில் நிற்கும்போது வன்னிப்பதியில் அமைந்துள்ள இலங்கையிலுள்ள தேசிய திருயாத்திரை ஸ்தலமாகிய மருமடுப்பதியில் நிற்பது போன்ற உணர்வைத் தந்தது. காரணம் அங்கு மிகவும் கட்டையான மரங்கள் பக்தர்களின் கூட்டம் பல மொழிகளைச் சேர்ந்த பக்தர்கள் அங்காங்கே விடுதிகள் அமைத்து பழைய நண்பர்களை சந்திப்பதையும் உறவுகளோடு உறவாடுவதையும் உணவுகள் சமைத்து பகிர்ந்துகொண்டு இருந்த விதம் நமது நாட்டின் மடுப்பகுதியை மிகவும் ஒட்டியவையாகவே





அமைந்திருந்தது. பற்றிமா மாதாவின் தேவாலய முற்றம் வற்றிக்கான் சிற்றியின் முற்றத்தை விட பல மடங்கு பெரிதாக அமைந்திருந்தது அங்கு மாதா கடைசியாக காட்சி கொடுத்த இடத்திற்குப் பக்கத்திலே மெழுகு வர்த்திகள் எரிக்கும் பகுதியும் இருந்தது அங்கு செல்வதற்கு பக்தர்களின் வருகை பெருகியதால் நெருக்கடியால் மணிக்கணக்கில் வரிசைகளில் நின்று நேரம் சென்றாலும் தங்கள் தங்கள் பக்தி முயற்சிகளை நிறைவேறிறினார்கள். அத்துடன் அதற்கு அருகாமையில் மாதா கடைசியாகக் காட்சி கொடுத்த இடத்தில் பாபரசர் வருகை தர இருந்த படியால் அவற்றில் தங்கி பாப்பரசரின் வருகையில் பங்கெடுக்கக்கூடியதாக இருந்தது மாலை ஆறு மணிபோல் அவர் வந்து விமானநிலையத்தில் இறங்கிய நேரம் தொடங்கி அவர் ஆலயம் வரும் வரை அவரது பாதுகாப்பு வானூர்தி மூலம் அவரது வாகனத்திற்கு மேலே ஒரு 50 அடி உயரத்தில் அவருடன் பிரயாணம் செய்தது. அப்போது மேலே இருந்து ஊடகவியலாளர்கள் தொலைக்காட்சியிலும் வானொலியிலும் அவரது வருகையை வெளிப்படுத்திய வண்ணமிருந்தார்கள் பக்தர்கள் கூட்டம் வீதியோரம் முழுவதும் அவரது வருகையை எதிர்பார்த்திருந்து அவரை நேரடியாக ஒரு முறை பார்வையிட நின்ற விதம் அவர்களில் பெரும்பாண்மையான இளைஞர்கள் அங்கும் இங்கும் ஓடி அவரைப் பார்வையிட அவரைத் தொடர்ந்த விதம் பாப்பரசர் அருகில் நிற்க பல முறை ஓடி திரிந்த விதம் மிகவும் ஆர்வமான ஆழமான அற்புதமான விசுவாசமான பக்தர்களின் உள்ளத்திற்கும் உடலுக்கும் நல் உணர்வை சுகத்தை கொடுத்தது அனைத்துப் பக்தர்களும் முக்கியமாக இளைஞர்கள் வெளிப்படுத்திய விதம் ஆச்சரியமாக இருந்தது. பாப்பரசர் வருகை தந்து செபமாலையிலும் மெழுகுதிரி பவணியிலும் பங்கெடுத்து உலக சமாதானத்திற்காக மன்றாடும் படி செபமாலை செய்யுங்கள் என்று கூறியதுடன் இரசியா நாடு கடவுள் நம்பிக்கை இல்லாத கூட்டு வாழ்விலிருந்து இப்போது கடவுள் நம்பிக்கைக்கு உடன்பட மனம் மாறிக்கொண்டு வருவதை அவதானிக்கக் கூடியதாகவுள்ளது என்று மக்களுக்கு உரை நிகழ்த்தி சென்றார்.

பெரும்பாலான பக்தர்கள் தேவாலய முன்றலில் ஒன்று கூடிய தன் பின்னர் அங்கு வந்திருந்த பக்தர்களோ அல்லது போரூந்துக்களோ வெளியேறவில்லை. காரணம் அடுத்த நாள் பாப்பரசர் பிரான்சிஸ் மீண்டும் பற்றிமா மாதா ஆலயத்தின் முன்றலில் வருகை தந்து பற்றிமாதாவின் புதுமைகள் நடக்க ஆரம்பித்த நூறாவது ஆண்டையும் பற்றிமா மாதா காட்சி கொடுத்த பிரான்சிஸ் ஐசிந்தா அவர்கள் இருவருக்கும் புனித பட்டம் வழங்கும் நிகழ்வையும் 100வது பற்றிமா மாதாவின் திருவிழா திருப்பலியையும் நிறைவேற்றி கொண்டாடுவார் என்று தான் அன்னையிடம் பக்திதோடு வருகை தந்த பக்தர்கள் யாவரும் இருந்த இடத்திலிருந்து அங்கிருந்து அசையவுமில்லை. இருந்த இடத்தை விட்டு நகரவுமில்லை. நகரமுடியாத நிலையும் கூட ஆகவே தான் நாங்களும் அங்கிருந்து சில நிமிடங்கள் தூரத்தில் நிறுத்தியிருந்த எமது சொகு' வண்டியில் பல நூற்றுக்கணக்கான பஸ் வண்டிகளுடனும் விடுதிகளில் தங்கிய பக்தர்களுடனும் தான் ஒன்றிணைந்து எமது பக்தர்களும் பற்றிமா மாதாவின் புனித பூமியில் தான் அந்த இரவு முழுவதும் அங்கே தங்கினோம். அது நடுத்தெருவுமில்லை வீதியுமில்லை. பற்றிமா அன்னையின் புனித பூமி என்பதை மறந்ததும் ஏனோ???... அருகாமையில் உள்ள ஹொட்டல் ஒன்றில் எமது அவசிய தேவைகளை நிறைவு செய்து அதிகாலையில் 4 மணிக்கு எழுந்து பற்றிமா மாதா நூற்றாண்டில் ஒரே ஒரு முறை நடந்த கத்தோலிக்க திருச்சபையின் தலைவராகிய பப்பரசர் பிரான்சிஸ் அவர்களால் சிறப்பித்த பெரும்விழாவில் நாமும் கலந்து கொள்ள கிடைத்த பாக்கியம் பெருவகையானது. இறுதியில் பாப்பரசரின் ஆசீர்வாதத்தையும் அன்னையின் ஆசீர்வாதத்தையும் பெற்று மகிழ்ந்த பிறகு நாம் புறப்பட்டு லிஸ்போன் நகரத்திற்கு சென்றோம். அங்கு இரவு தங்கி அதிகாலையில் ரொறொன்ரோ நகரம் புறப்பட விமான நிலையம் வருகை தந்து ரொறொன்ரோ வந்து அடைந்தோம். இத்திருயாத்திரை எம் பக்தர்களுக்கு பெரு மகிழ்ச்சியையும் ஆனந்தத்தையும் 100வது பற்றிமா மாதாவின் புதுமைகள் நிறைவையொட்டி பாப்பரசர் பிரான்சிஸ் அவர்களால் நடாத்தப்பட்ட திருவிழா திருப்பலியில் பங்கு பற்றும் போது தங்களுக்குக் கிடைத்த புதுமைகளையும் நினைத்து அக்கழிப்பதை காணும்போது இறைவனுக்கு நன்றி கூறுகின்றோம். பற்றிமா மாதா திருத்தலத்திற்கு யாத்திரையாக சென்று வந்ததன் பின்னர் பக்தர்களுக்கு கிடைத்த புதுமைகள் அற்புதங்களை சிறப்பாக ஒரு சிறுவன் பிறப்பிலிருந்தே கதைக்காமல் இருந்தார். அவரின் பெற்றோர் திருயாத்திரையில் பங்குபற்றி அன்னையிடம் வரம் கேட்டதன் பின்னர் சிறுவன் அன்னையின் அருளால் வாய் திறந்து கதைக்கிறார். தாய்மரியாளுக்கு நன்றி செலுத்துகிறார்கள். தொழில் கிடைத்தவர்கள் நன்றி செலுத்துகிறார்கள். பல உடல் உள நோய்களினால் வருந்தியவர்கள் குணமடைந்து அன்னைக்கு நன்றி செலுத்துகிறார்கள். இதைப்போன்று அனைத்து பக்தர்களுக்கும் அன்னையின் அருளால் பல நன்மைகளை அடைந்துள்ளார்கள். இனிவரும் காலங்களிலும் அன்னைக்கு செபமாலை சொல்லி போற்றுவோம். அன்னையின் பாதுகாப்பையும் அரவணைப்பையும் பெற்று மகிழ்வோம். தொடர்ந்தும் அன்னையின் பரிந்துரை மூலமாக இறைமைந்தன் இயேசுவோடு ஒன்றிணைவோம். எமது அழைப்பை ஏற்று வருகை தந்த பக்தர்களுக்கும் எமது நன்றிகளைக் கூறி நிற்கின்றோம்.



## அருட்தந்தை. லீனஸ் சொய்சா (அமதி) அடிகளாருக்கு நன்றிகளும் பாராட்டுக்களும்.

புனித லூர்தன்னை திருத்தலம் பிரான்ஸ். தமிழ் திருப்பயணிகளுக்கான ஆன்மீகத் தந்தை இலங்கையில் வங்காலையில் வளம்மிகு பாரம்பரியத்தின் பரமனின் அருட்கொடைகளோடு உதித்த புன்னகை முகத்தோடு விளங்குகிற தந்தையர். ஒரு முறை பாடுவது இரு முறை செபிப்பதற்கு சமன் என்பதற்கு ஒப்ப அருட்தந்தை லீனஸ் சொய்சா அடிகளார் அன்னை மரியாயை வாயாரப் புகழ்பாடியவர். மரணத்தின் பிடியில் உணர்வுகள் எதுவுமின்றி 15 நாட்கள் வைத்தியர்களால் கைவிடப்பட்ட நிலையில் இருந்த ஒருவரை அருட்தந்தை லீனஸ் சொய்சா அடிகளாரின் பாடலைக் கேட்டு விழித்தெழுந்தார். பாடல்கள் மூலம் பல உள்ளங்கள்களை குணமாக்கினார். அருட்தந்தை லீனஸ் சொய்சா இசைவேந்தர் என்று பெயர் பெற்றவர். இசைக்கருவிகளையும் இயக்குகின்ற திறமையும் பெற்றவர். வேதனை சோதனையோடு வாடும் பக்தர்களின் வேண்டுதல் இறைவனின் இதயத்தை முற்றமிடும் அளவிற்கு ஆன்மீகப் பணியில் சிறந்து விளங்கிறார். அருட்தந்தை லீனஸ் சொய்சா அடிகளார் அமல மரித்தியாகிகள் சபையைச் சேர்ந்தவர். நான் செல்லும் இடமெல்லாம் உன்னைக் நான் பார்க்க வேண்டும் யேசுவே. என்னைப் பார்க்கும் மனிதரெல்லாம் உன்னைக் என்னில் பார்க்க வேண்டும் யேசுவே என்ற குறிக்கோளுடன் எளிய மனம் கொண்டு ஏழ்மையே உருவாகத் தாழ்நிலை ஏற்று எல்லோருக்கும் எல்லாமாக எல்லோர் மனங்களிலும் உறையும் அன்பனாக ஆயனாக நண்பனாய் ஆருயிர் தோழனாய் சகோதரனாய் நல்ல வழிகாட்டியாய் தந்தையாய் இருந்து இறை ஞான வாழ்க்கையில் அல்லும் பகலும் அயராது உழைப்பதில் வல்லுனராய் வெள்ளை மனதை வெளிக்காட்டும் கொள்ளைச் சிரிப்பின் கோமகனாய். அள்ள அள்ளக் குறையாத அன்பின் வள்ளலாய் படைப்புக்களே மயங்கும் இன்னிசையில் வல்லுனராய் .கல்வாரித் திருப்பலியின் போது அருட்தந்தையின் மறைபோதனையால் அன்னை மரியின் நற்பண்புகளைப் பற்றி எடுத்தியம்புவதில் இவருக்கு நிகர் யாருமில்லையே.

ஐரோப்பா மண்ணிலே பரீஸ் ஆன்மீகப்பணியகத்தில் 2008 ஆண்டு முதல் 2015 வரையும் அருட்தந்தை. லீனஸ் சொய்சா அமதி அடிகளார் பல பணிகளையும் பல சேவைகளையும் புதிய திட்டங்களையும் திறம்படவும் சிறப்பாகவும் வழங்கினர் என்பதை நினைக்கும் போது ஆனந்தம் அடைகிறோம். பிரான்ஸ் தேசத்தின் ஆன்மீக இயக்குனராக இருந்து தனது சங்கீத ஞானத்தால் இறை மக்களை இறைவன் பால் இணைத்த பெருமை அருட்தந்தையே சாரும். மரியன்னை தரிசிப்பால் திருக்குடும்ப செபவழியால் பற்பல பலனும் கண்டு மனநிறைவு வாழ்த்துப் பெற்றார்.

அருட்தந்தை. லீனஸ் சொய்சா அமதி அடிகளார் 25வது குருத்துவ வெள்ளி விழாவையும் நிறைவு செய்துள்ளார். தந்தையர்க்கு எமது பாராட்டுக்களையும் நன்றிகளையும் தெரிவிக்கின்றோம். எமது கனடா கத்தோலிக்க வெளியிட்டகத்தின் சார்பாக நடாத்துகின்ற 24வது ஆண்டை நிறைவு செய்துள்ள மாதாந்த சஞ்சிகை அன்புமக்களே என்ற புத்தகத்திற்கு 23 பக்கங்களைக் கொண்ட மரியாளுக்கு மரியாதையா? ஒரு முறை படித்து பாருங்கள் உண்மை புரியும் என்ற தலைப்பில் கலாநிதி அருட்தந்தை லெறின் டிறோஸ் அடிகளாரின் துணையுடனும் தமிழ் திருப்பயணிகளுக்கான ஆன்மீகக் குரு அருட்தந்தை லீனஸ் சொய்சா (அமதி) புனித லூர்தன்னை திருத்தலம் பிரான்ஸ் அவர்களால் சேர்ந்து எழுதப்பட்ட கட்டுரைத் தொகுப்பை 2016ம் ஆண்டு ஐப்பசி மாத தமிழ் கத்தோலிக்க வெளியீடான சஞ்சிகையில் மரியாவை ஏற்றுக் கொள்ள அஞ்சவேண்டாம் மரியாவை ஆண்டவரின் தாய் என அழைப்போம். (மத்:1-20டி) தலைப்பில் 5 ஆயிரம் சஞ்சிகை கனடாவில் பிரசுரிக்க உதவிய பெருமையும் புகழும் அருட்தந்தையர்களுக்கே சாரும் . “அன்பு மக்களே” ஆசிரியர் மறைபணி டேவிட் தோமாஸ் மற்றும் குழுவினர் சார்பாக எமது பாராட்டுக்களையும் நன்றிகளையும் தெரிவிப்பதில் மகிழ்சிசி அடைகின்றோம்.

கத்தோலிக்க திருச்சபையால் 2017ம் ஆண்டு போத்துக்கல்லில் 100வது பற்றிமா மாதா புதுமைகள் நிறைவை ஒட்டி திருவிழாவையும் இரண்டு சிறுவர்களுக்கு புனிதப்பட்டத்தையும் பாப்பரசர் பிரான்சிஸ் அவர்கள் சிறப்பிக்க வந்த போது நாம் இந்நிகழ்வில் பங்குபெற சென்ற திருயாத்திரையில் லூர்தன்னை திருத்தலத்திற்கு மூன்று நாள் யாத்திரை செய்தோம் அங்கு தமிழ் திருப்பயணிகளுக்கான ஆன்மீகக் குரு அருட்தந்தை லீனஸ் சொய்சா (அமதி) அவர்களால் சர்வதேச திருயாத்திரை ஸ்தலமாகிய லூர்தன்னை ஆலயத்தின் வரலாறு பற்றியும் அவற்றின் தோற்றம் உருவாக்கம் வளர்ச்சி பற்றியும் பேர்னபேத்தாம்மாள் பெற்ற அற்புதங்கள் புதுமைகள் பற்றியும் விளக்கியதுடன்.

லூர்து கெபியில் காட்சி கொடுக்கும் போது பேர்ணபேத்தம்மாள் நீங்கள் யார் என்றும் உங்கள் பெயர் என்ன என்றும் கேள்வி எழுப்பியபோது “நானே அமல உற்பவம்” என்று சொல்லி செபமாலை சொல்லும் படியும் மாதா கேட்டுக்கொண்டார்.

இன்னும் ஒரு முறை மாதா காட்சி கொடுக்கும் போது பேர்ணபேத்தம்மாள் லூர்து நகரில் தண்ணீர் தட்டுப்பாடு இருப்பதால் நீர் வேண்டுமென்று கேட்டார் மாதா கெபியின் அடியில் இடத்தைக் காட்டி இதில் கை வைத்து தோண்டும் படி கேட்டுக்கொண்டார் அப்போது உருவாகிய நீர் ஊற்று இப்போது ஆறாகபெருகி நிற்பதைப்பார்க்கக் கூடியதாக உள்ளது அத்துடன் உருவாகிய தண்ணீர் ஊற்று எடுக்கும் இடத்திலிருந்து தோய்வதற்காக அமைக்கப்பட்டிருக்கும் தொட்டிகளில் பல்லாரயிரக்கனக்காண பக்தர்கள் குளித்து ஆன்மீக விசுவாசத்தினால் உடல் உள நலம் பெற்று பயன்டைகின்றார்கள் அன்னையின் அருளால் அற்புதங்களையும் அதிசயங்களையும் பற்றி அன்னைக்குரிய பாசத்தோடும் பக்தியுடனும் உறுதியுடனும் அழகான விளக்கங்களையும் உண்மைச்சம்பவங்களையும் பக்தர்கள் மனதில் ஆழமாகவும் அழகாகவும் பக்தர்களுக்கு எடுத்துக் கூறி இறையுணர்வோடு அருட்தந்தை லீன்ஸ் வழிகாட்டினார் கிடைத்த நன்மைகளுக்காகவும் நன்றியும் பாரட்டும் தெரிவித்துக்கொள்கிறோம்.

தந்தைக்கு லூர்தன்னை திருத்தலத்தில் பெரிய பொறுப்புக்கள் இருந்தபோதிலும் கனடாவிலிருந்து சென்ற தமிழ் கத்தோலிக்க மக்களுக்கு தனது வழிகாட்டலின் மூலம் லூர்தன்னையின் மேல் கொண்ட அன்பின் அனுபவத்தின் தான் பெற்ற கொண்ட அனைத்தையும் பற்றி தேட்டத்தெளிவாகவும் கூறிய அனைத்திற்கும் யாத்திரையர்கள் சார்பாகவும் எமது கனடா கத்தோல்க்க வெளிணிட்டகத்தின் சார்பாகவும் நன்றிகளையும் பாராட்டுக்களையும் செலுத்தி நிற்கிறோம். இனிவரும் காலங்களிலும் அருட்தந்தை லீனஸ் அடிகளாரின் குருத்துவப்பணி எங்கு சென்றாலும் சிறந்து விளங்க வேண்டும். இறையாசீர் பல பெற்று அன்னைமரியின் ஆசீர்களும் பல அவரில் நிறைய இறையருள் வேண்டி அருட்பணியே தந்தையின் சேவை வாழ்க வளர்க தந்தையருக்கு மீண்டும் நன்றிகள்

செபமாலை தாசர் சபையைச் சேர்ந்த அருட்தந்தை பிரான்சிஸ் ஜெயசீலன் அவர்களுக்கு நன்றி நவில்கின்றோம்.

யாழ் மறை மாவட்டத்தினரால் சின்ன ரோம் என்று அழைக்கப்படும் சில்லாலையை பிறப்பிடமாகக் கொண்டவர். புனித கதிரை மாதா ஆலயப் பங்கைச் சேர்ந்தவர். 1989ம் ஆண்டு வார்த்தைப்பாடு எடுத்து செபமாலை தாசர் சபையில் 1998ம் ஆண்டு ஆவணி மாதம் 20ம் திகதி செபமாலை தாசர் சபைக் குருவாக திருநிலைப்படுத்தப்பட்டார். 28 வருடங்கள் குருவாகப் பணியாற்றியுள்ளார். அருட்தந்தையார் தனது பிறந்த இடமாகிய சில்லாலையில் 31வது குருவாக திருநிலைப்படுத்தப்பட்டவர் என்பது சில்லாலை உறவுகளுக்கு பெருமை என்று தான் கூற முடியும். கண்டி நீர்கொழுப்பு வவுனியா இன்னும் பல பங்குகளில் பணியாற்றியதுடன் தற்பொழுது யாழ் ஆச்சிரமத்தில் பெரிய குருவாக பணியாற்றுகிறார். சிறப்பாக 2008ம் ஆண்டு மேற்படிப்புக்காக கனடாவில் ஓட்டவா புனித சின்னப்பர் பல்கலைக்கழகத்தில் இறையியல் கத்தோலிக்க சட்டம் முடித்து பட்டம் பெற்றபின்னர் லாண்டன் ஒண்டாறியோவில் ஒரு பங்கில் பணிபுரிந்து. லண்டன் மேற்றாசனத்தில் சாத்தம் என்னும் இடத்தில் லண்டன் ஒண்டாறியோ யாத்திரைத் ஸ்தலமாகிய புனித பற்றிக் ஆலயப்பங்கில் செபமாலை தாசர் சபையை உருவாக்கிய பெருமையும் இலண்டன் மறை மாவட்ட யாத்திரை ஸ்தலமாக செபமாலை யாத்திரை ஸ்த்தலத்தை உருவாக்கிய புகழும் அருட்தந்தை பிரான்சிஸ் ஜெயசீலனுக்கே உரியது. கனடாவில் 2009 தொடக்கம் 2016 வரை செபமாலை தாசர் சபை சுப்பிரியராக கடமையாற்றி சிறப்பான பணிகளையும் சேவைகளையும் செய்து அயராது உழைத்தவர். 2016ம் ஆண்டு இறையிரக்கதின் பிரதிநிதியாக பார்பரசரை தரிசிக்க ரோமுக்கு சென்று வந்தார். தமிழ் கத்தோலிக்க வெளியீட்டகத்திற்கும் அருட்தந்தையின் வருகையும் அவருடைய பிரசன்னமும் எம்மை உட்சாகப்படுத்தியது காரணம் வாரா வாரம் வெள்ளிக்கிழமை நாம் நடத்துகின்ற பரம் பொருள் கத்தோலிக்க நிகழ்ச்சிக்கு அருட்தந்தையின் மறையுரையும் கேள்விகளுக்கு பதில் அளிக்கின்ற விதமும் நேயர்களின் மனதில் ஆழமாக ஆறுதல்படுத்தும். தெளிவுபடுத்தும் தன்மை கொண்டது திருச்சபையில் அல்லது வேதாகமத்தில் எந்த எப்படியான சந்தேகக் கேள்விகளைக் கேட்டாலும் அதற்குரிய சரியான பதிலையும் வேதாகமத்தில் உள்ள வார்த்தைகளையும் ஆதாரமாகக் கொண்டு விளக்கம் கூறுவார் அருட்தந்தை ஜெயசீலனுக்கு கிடைத்த சிறப்பு ஆற்றலும் திறமையும் நமது சமூகத்தின் இறை விசுவாசத்தை ஊக்குவிக்கின்றது இன்னும் அன்புமக்களே என்கிற மாதாந்த சஞ்சிகைக்கு அளிக்கும் ஆக்கங்களும் அறிவுக்கும் ஆன்மீகத்திற்கும் உரியதாக உயர்த்தப்படுகிறது அன்னை திரேசாவுக்கு புனித பட்டம் வழங்கப்பட்டபோது அன்றைய தினம் தமிழ் கத்தோலிக்க வெளியீட்டகத்தால் நடாத்தப்பட்ட புகழ் மாலை விழா பிரதம விருந்தினராக கலந்து சிறப்பித்தார். இவர் இலங்கைக்கு புறப்படும் முன்பு ரொறொன்ரோ வருகை தந்து நான்கு நாள் பிரயாணம் மொன்றியல் ஓட்டவா போன்ற இடங்களை தரிசிக்க சென்றார் அப்போது அவருடன் கூடிச் செல்லும் பாக்கியம் எனக்கும் கிடைத்தது அப்போது கனடா புனிதராக சில வருடங்களுக்கு முன்பு திரு நிலைப்படுத்தப்பட்ட கற்றினா அவர்கள் வாழ்ந்த இடம் அவரது ஆலயம் அவரது தூபியில் திருப்பலியும் நிறைவேற்றி அடுத்து அவர் படித்த ஒட்டவா பல்கலைகளகத்திற்கும் சென்று பார்வையிட்டு இறை இரக்கத்தின் நிலையத்திற்கும் சென்று இயக்குனரையும் சந்தித்து ஒரு திருயாத்திரைப் பயணத்தை நிறைவேற்றிய சமாதானம் எமக்குக் கிடைத்தது இவரது பணி பார் எங்கும் சிறக்க இறை ஆசீர் வேண்டிநிற்கிறோம்.

# விசுவாசத்தின் மறைசாட்சிகள் பாராட்டி வாழ்த்துகின்றோம்



மன்னார் மறைமாவட்டக் குருவும் முத்தரிப்புத்துறை தூய செங்கோல் அன்னையின் மைந்தனுமாகிய வண. பிதா அருளப்பு கிறிஸ்ரி றூபன் பெர்னாண்டோ அடிகளார் இத்தாலியின் உரோமாபுரியிலுள்ள ஊர்பானியானா பாப்பிறை பல்கலைக்கழகத்தில் கடந்த 4 வருடங்களாக திருவிவிலிய இறையியலில் தனது உயர்கல்வியை கற்று தான் கற்ற பல்கலைக்கழகத்தில் அனைத்துப் பாடங்களிலும் சராசரியாக 97.23% பெறுபேற்றினை பெற்று தான் கற்ற திருவிவிலிய இறையியல் துறையில் பல்கலைக்கழகத்தில் முதல் நிலை மாணவனாக தெரிவு செய்யப்பட்டுள்ளார் என்பதனை மகிழ்ச்சியுடன் அறியத்தருகின்றோம்.

அருட்தந்தை அவர்களின் பணிவாழ்விற்கும் கல்வி பெறுபேற்றுக்கும் காரணமாகவும் உதவியாகவும் இருந்த இறைவனின் அளவில்லா அருட்கொடைகளுக்கு நன்றி செலுத்துவதுடன் அவரை மேற்படிப்பிற்காக தெரிவுசெய்து அனைத்து உதவிகளையும் வழங்கி ஆக்கமும், ஊக்கமும் அளித்த எமது முன்னாள் மறைமாவட்ட ஆயர் மேதகு கலாநிதி இராயப்பு யோசேப்பு ஆண்டகை அவர்களுக்கும், தற்போதைய மன்னார் மறைமாவட்ட அப்போஸ்தலிக்க பரிபாலகர் ஆயர் மேதகு கலாநிதி கிங்சிலி சுவாம்பிள்ளை ஆண்டகை அவர்களுக்கும் மற்றும் குரு முதல்வர் அவர்களுக்கும் ஏனைய குருக்களுக்கும் முத்தரிப்புத்துறை பங்கு மக்கள் சார்பான நன்றிகளையும், வாழ்த்துக்களையும் தெரிவித்து நிற்கின்றார்கள்.

இதேவேளை திருவிவிலிய இறையியல் உயர் கல்வியில் வண. பிதா றூபன் அடிகளார் முதல்நிலை மாணவனாக தெரிவுசெய்யப்பட்டுள்ளதை இட்டு மன்னார் மறைமாவட்டம் சார்பான நன்றிகளையும் பாராட்டுக்களையும், இறையாசீரையும் தெரிவித்து நிற்பதோடு அருட்தந்தை அவர்கள் இதேபோன்று பல வெற்றிகளை அடைந்து இறைவனின் பணியை முனைப்புடன் எடுத்துச்செல்ல இறைவன் துணைபுரிய ஆசீப்பதுடன் அவரை பாராட்டி வாழ்துகின்றோம்.



### ஜெபம் என்பது என்ன?

கடவுளோடு உரையாடுவது ஜெபம். ஒரு நல்ல நண்பர் நமக்கு இருந்தால் நம் எல்லா விஷயங்களையும் மனம் விட்டு பகிர்ந்து கொள்வது நட்புக்கான இலக்கணம். கடவுளிடம் நாம் நம் வாழ்க்கையை பற்றி பேசுவதே ஜெபம். நாம் கடவுளிடம் நமது இதயத்தை திறந்து பேசுவதும், நம்மோடு பேசும் கடவுளின் வார்த்தைக்கு திறந்த மனத்துடன் செவிமடுப்பதுமே ஜெபம்.

> எதைப்பற்றியும் கவலைப்பட வேண்டாம். ஆனால் நன்றியோடு கூடிய இறை வேண்டல், மன்றாட்டு ஆகிய அனைத்தின் வழியாகவும் கடவுளிடம் உங்கள் விண்ணப்பங்களைத் தெரிவியுங்கள். அப்பொழுது, அறிவெல்லாம் கடந்த இறை அமைதி கிறிஸ்து இயேசுவோடு இணைந்துள்ள உங்கள் உள்ளத்தையும் மனத்தையும் பாதுகாக்கும். - பிலிப் 4:6-7

### எதற்காக ஜெபம் செய்ய வேண்டும்?

கடவுளின் அருகில் நாம் நெருங்கிவர ஜெபம் நமக்குத் துணைசெய்கிறது. கடவுளிடம் நாம் பெற்ற நன்மைகளுக்கு நன்றிசொல்லும் போதும், அவர் புகழ் பாடும் போதும், நமது பாவங்களுக்காக மனம் வருந்தும் போதும், நமது பலகீனத்தில் அவரது உதவியை நாடும் போதும், அவர் சித்தத்தை நிறைவேற்றும் போதும், கடவுள் நம்மோடு பேசுகிறார். கடவுள் நமது சிந்தனைகளையும் எண்ணங்களையும் மாற்றி நாம் என்ன செய்ய வேண்டும் என்று அவர் விரும்புகிறாரோ அதைச் செய்யத் தூண்டுகிறார். நாம் ஜெபம் செய்வதன் மூலம் கடவுளின் சித்தத்தை நிறைவேற்ற அதிக வாய்ப்பை நமக்குக் கொடுக்கின்றார். இதன் மூலம் நாம் கடவுளில் இணைந்து வாழும் பேற்றைப் பெறுகிறோம். முத்திப்பேறு பெற்ற அன்னைத் தொராசாவும் மற்ற புனிதர்களும் இப் பேற்றைப் பெற்றவர்களே.

> கேளுங்கள்; பெற்றுக் கொள்வீர்கள். அப்போது உங்கள் மகிழ்ச்சியும் நிறைவடையும். யோவான் 16:24

யாரிடம் ஜெபம் செய்ய வேண்டும்? கடவுளிடமா? யேசுவிடமா? தூய ஆவியிடமா? புனிதர்களிடமா? நாம் கடவுளிடமோ அல்லது யேசுவிடமோ அல்லது தூய ஆவியிடமோ ஜெபம் செய்யலாம்.இந்த மூவரிடமும் எழுப்பப்படும் ஜெபங்கள் விவிலியத்தில் அனேக இடங்களில் காணப்படுகின்றன. கடவுள் ஒருவர்தான். இயேசுவிடம் ஜெபம் செய்யும் போது இறைத் தந்தையிடமும் நாம் ஜெபம் செய்கிறோம். நாம் ஜெபம் செய்யும் வார்த்தைகளையும் கடந்து கடவுள் நம் உள்ளத்தையும் எண்ணங்களையும் அறியக்கூடியவர். புனிதர்கள் கடவுள் அல்ல. அவர்கள் கடவுளின் விருப்பத்தின்படி இவ்வுலகில் வாழ்ந்த மனிதர்கள். தங்களின் தூய வாழ்வால் விண்ணகத்தை சுதந்தரித்துக் கொண்டவர்கள். அவர்கள் இறைவனின் அருகில் அமர்ந்திருக்கிறார்கள், நமக்காக கடவுளிடம் பரிந்து பேசுகிறார்கள், நாம் செய்யும் வேண்டுதல்களை கடவுளிடம் மன்றாடி நமக்குப் பெற்றுத் தருகிறார்கள் என்பதே நமது விசுவாசம்.

> சகோதர சகோதரிகளே, நம் ஆண்டவர் இயேசு கிறிஸ்துவை முன்னிட்டும் தூய ஆவி நம் உள்ளத்தில் பொழிந்துள்ள அன்பை முன்னிட்டும் நான் உங்களைக் கேட்டுக் கொள்வது; எனக்காகக் கடவுளிடம் வேண்டி, என் போராட்டத்தில் எனக்குத் துணை செய்யுங்கள் எனக்காகக் கடவுளிடம் வேண்டி, என் போராட்டத்தில் எனக்குத் துணை செய்யுங்கள். -உரோ 15:30

### கத்தோலிக்க கிறிஸ்தவர்கள் சிலை வழிபாடு செய்கிறார்களா?

இல்லை. சிலைவழிபாடு என்பது ஒரு குறிப்பிட்ட சிலைக்கு சக்தி இருக்கிறது என்று நம்பி அந்த சிலையை தெய்வமாக வழிபடுவது. கத்தோலிக்க ஆலயங்களில் நிறுபப்பட்டிருக்கும் சுரூபங்கங்கள் (சொரூபம் - மாதிரி) இயேசுவை அல்லது அந்தந்த புனிதர்களை நம் நினைவில் கொண்டுவர, தியானிக்க, அடையாளமாக பயன்படுத்தப்படுகிறது. அந்த சுரூபங்களுக்கு சக்தி இருப்பதாகவோ அல்லது அவைகளையே கடவுளாகவோ நாம் வழிபடுதில்லை. புனிதர்களை நாம் நம் வாழ்வின் முன்மாதிரியாகக் கொள்ளவேண்டும். புனிதர்கள் கடவுள் அல்ல. புனிதர்களுக்கு, அன்னை கன்னிமரியாள் உட்பட அனைவருக்கும் நாம் வணக்கம் மட்டுமே செலுத்துகிறோம். புனிதர்கள் இந்த உலகில் வாழ்ந்தபோது இறைவனுக்கு ஏற்புடைய வாழ்கை வாழ்ந்து மரித்தவர்கள்(உம் - அன்னை தெரசா). புனிதர்கள் இறைவனோடு விண்ணகத்தில் இருப்பதால் புனிதர்களிடம் நாம் நமக்காக இறைவனிடம் பரிந்துபேச அழைப்பு விடுவிக்கின்றோம்.

### கடவுளாகிய இயேசு ஏன் ஜெபம் செய்தார்?

இயேசு கடவுளும் மனிதனுமானவர். இந்த உலகில் இயேசு முழு மனிதனாக அவதரித்தார். அவர் கடவுளாயிருந்தாலும் இந்த உலகின் மனிதரைப் போல் மனிதராக வாழ்ந்தார். அவர் இறை தந்தையைச் சார்ந்து வாழ்ந்தார். எல்லாவற்றிலும் இறை தந்தையின் சித்தத்தையே நிறைவேற்றுகின்றார். இறை தந்தையை முழுமையாக அன்பு செய்து அவரில் வாழ்வதே வாழ்வாகக் கொண்டிருந்தார். ஆகவே அவரோடு உரையாடுவதில் அதிக நேரத்தை கழிக்கின்றதை நாம் நற்செய்திகளில் காண்கின்றோம்.

> அவர் இவ்வுலகில் வாழ்ந்த காலத்தில், தம்மைச் சாவிலிருந்து காப்பாற்றவல்லவரை நோக்கி உரத்த குரல் எழுப்பி, கண்ணீர் சிந்தி, மன்றாடி வேண்டினார். அவர் கொண்டிருந்த இறைப்பற்று கலந்த அச்சத்தை முன்னிட்டு, கடவுள் அவருக்குச் செவி சாய்த்தார். அவர் இறைமகனாயிருந்தும், துன்பங்கள் வழியே கீழ்ப்படிதலைக் கற்றுக்கொண்டார். எபிரே 5:7-8

### கடவுள் நம் தேவைகளையும் அறிந்திருப்பவர். பின்னர் நாம் ஏன் நம் தேவைகளுக்ககாக ஜெபிக்க வேண்டும்? ஏன் மீண்டும் மீண்டும் ஜெபிக்கவேண்டும்?

நாம் ஜெபம் செய்யும் போது தாழ்ச்சியான உள்ளத்தையும் கடவுள் முன் நம்முடைய இயலாமையையும் வெளிப்படுத்துகிறோம். இவ்வாறு செய்வது

கொடுத்துக்கொண்டே இருக்கின்ற கடவுளின் கொடைகளை நாம் பெறுவதற்கு நம்மைத் தகுதியாக்கிக் கொள்ளும் கருவியாக ஜெபம் அமைகின்றது. ஆகவே நாம் தொடாந்து ஜெபம் செய்ய வேண்டும்.

உம் அடியானின்; மனத்தை மகிழச் செய்யும்; என் தலைவரே! உம்மை நோக்கி என் உள்ளத்தை உயர்த்துகின்றேன். ஏனெனில் என் தலைவரே! நீர் நல்லவர்; மன்னிப்பவர்; உம்மை நோக்கி மன்றாடும் அனைவருக்கும் பேரன்பு காட்டுபவர். ஆண்டவரே, என் வேண்டுதலுக்குச் செவிகொடும்; உம் உதவியை நாடும் என் குரலைக் கேட்டருளும். என் துன்ப நாளில் உம்மை நோக்கி மன்றாடுகின்றேன்; நீரும் எனக்குப் பதிலளிப்பீர். சங்கீதம் 86:4-7

### எந்த நிலையில் ஜெபம் செய்யவேண்டும்? முழந்தாள்படியிட்டு? கைகூப்பி?

விவிலியத்தில் மக்கள் ஜெபம் செய்யும் போது பல்வேறு நிலைகளில் ஜெபிக்கின்றதைக் காண்கிறோம். நின்றுகொண்டு, கைகளை உயர்தி, கவிழ்ந்து, உட்கார்ந்து, முழந்தாள்படியிட்டு ஜெபித்திருக்கிறார்கள். எந்நிலையிலும் ஜெபிக்கலாம் என்றாலும் முடிகின்ற சூழ்நிலைகளில் முழந்தாள் படியிட்டு கைகூப்பி ஜெபிப்பது கடவுளுக்கு முன் நமது தாழ்ச்சியையும் பணிவையும் எடுத்துக்காட்டும் வண்ணமாக அமைகிறது. எல்லாவற்றிற்கும் மேலாக உண்மையாக, பயபக்தியோடு ஜெபிப்பது உகந்தது.

என் தலைவரே! என் இதழ்களைத் திறந்தருளும்; அப்பொழுது, என் வாய் உமக்குப் புகழ் சாற்றிடும். ஏனெனில், பலியினால் உம்மை மகிழ்விக்க முடியாது; நான் எரிபலி செலுத்தினாலும் நீர் அதில் நாட்டங்கொள்வதில்லை. கடவுளுக்கேற்ற பலி நொறுங்கிய நெஞ்சமே; கடவுளே! நொறுங்கிய, குற்றமுணர்ந்த உளத்தை நீர் அவமதிப்பதில்லை. சங்கீதம் 51:15-17

### கடவுளிடம் நாம் செய்யும் ஜெபம் சில வேளைகளில் கேட்கப்படுவதில்லையே ஏன்?

கடவுள் நம்மைவிட ஞானம் மிக்கவர். யார் யாருக்கு என்ன தேவை எப்போது தேவை என்பதை அவர் அறிவார். அவர் எப்போழுதும் நமக்கு நன்மையே செய்வார். சிலவேளைகளில் கடவுளின் திட்டம் மனித ஞானத்திற்கு எட்டுவதில்லை. ஆகவே கடவுள் நம் ஜெபத்தை கேட்காதவர் போல் நமக்குத் தெரிகிறது.

சிலவேளைகளில் சுயநலத்தோடு ஜெபம் செய்கிறோம். அரசர் சாலமோன் கடவுளிடம் ஞானத்தைக் கேட்டார். பொருட்செல்வமோ அல்லது படையோ, மேலும் அதிகாரத்தையோ அல்லது மேலும் அரசுகளையோ கேட்காததால் கடவுள் அனைத்தையும் அவருக்குக் கொடுத்தார்.

அல்லது கடவுளின் திட்டத்திற்கு மாறுபட்டு நம் எண்ணங்கள் அமைவதால் நம் ஜெபம் கேட்கப்படுவதில்லை. சில சமயங்களில் நம் ஜெபம் நேரடியாகக் கேட்கப்படாமல் வேறுவிதமாக நிறைவேற்றப்படுகிறது.

எல்லாவற்றிற்கும் மேலாக கடவுள் நம் ஜெபங்களைக் கேட்டருள்வார் என்ற ஆழ்ந்த விசுவாசமும் கடவுளின் அன்பும் பராமரிப்பும் நம் வாழ்வில் நிலைபெறும் என்ற உறுதியான நம்பிக்கையும் அனைத்திலும் கடவுளின் சித்தம் நிறைவேற்றப்படவும் தொடர்ந்து ஜெபிக்க வேண்டும்.

அவர்கள் மனந்தளராமல் எப்பொழுதும் இறைவனிடம் மன்றாட வேண்டும் என்பதற்கு இயேசு ஓர் உவமை சொன்னார்.பின் ஆண்டவர் அவர்களிடம், "நேர்மையற்ற நடுவரே இப்படிச் சொன்னாரென்றால், தாம் தேர்ந்துகொண்டவர்கள் அல்லும் பகலும் தம்மை நோக்கிக் கூக்குரலிடும்போது கடவுள் அவர்களுக்கு நீதி வழங்காமல் இருப்பாரா? அவர்களுக்குத் துணைசெய்யக் காலம் தாழ்த்துவாரா? விரைவில் அவர்களுக்கு நீதி வழங்குவார் என நான் உங்களுக்குச் சொல்கிறேன். - லூக்கா 18: 1, 6-8

பிறகு அவர் அவர்களை விட்டுக் கல்லெறிதூரம் விலகிச் சென்று, முழந்தாள்படியிட்டு, இறைவனிடம் வேண்டினார்; "தந்தையே, உமக்கு விருப்பமானால் இத்துன்பக் கிண்ணத்தை என்னிடமிருந்து அகற்றும். ஆனாலும் என் விருப்பப்படி அல்ல; உம் விருப்பப்படியே நிகழட்டும்" என்று கூறினார். லூக்கா 22:41-42

### அச்சிடப்பட்ட அல்லது மனப்பாடம் செய்த ஜெபங்கள் ஜெபிப்பதற்கு உகந்ததா?

இப்படித்தான் ஜெபம் செய்ய வேண்டும் என்ற விதிமுறைகளை கடவுள் நம்மிடம் எதிர்பார்கவில்லை. அச்சிடப்பட்ட அல்லது அனுதினம் நாம் அறிந்த ஜெபங்களைப் பயன்படுத்துவது ஜெபம் செய்ய உதவிசெய்யுமானால் பயன்படுத்தலாம். எடுத்துக்காட்டாக கர்த்தர் கற்பித்த ஜெபம், மங்கள வார்த்தை ஜெபம், தெரிந்த சங்கீதங்களை ஜெபிப்பது அல்லது பாடுவது சிறந்த ஜெபம். அச்சிடப்பட்ட ஜெபங்களை ஜெபிக்கும் போது கடகட வென ஒப்பிக்காமல், பொருளுணர்ந்து மன ஈடுபாட்டுடன் ஜெபிப்பது மேன்மைக்குரியது. (எடுத்துக்காட்டு: பரிசுத்த ஆவியானவர் ஜெபம்).

மேலும் நீங்கள் இறைவனிடம் வேண்டும்பொழுது பிற இனத்தவரைப் போலப் பிதற்ற வேண்டாம்; மிகுதியான சொற்களை அடுக்கிக் கொண்டே போவதால் தங்கள் வேண்டுதல் கேட்கப்படும் என அவர்கள் நினைக்கிறார்கள். நீங்கள் அவர்களைப் போல் இருக்க வேண்டாம். ஏனெனில் நீங்கள் கேட்கும் முன்னரே உங்கள் தேவையை உங்கள் தந்தை அறிந்திருக்கிறார்.ஆகவே, நீங்கள் இவ்வாறு இறைவனிடம் வேண்டுங்கள்;" விண்ணுலகிலிருக்கிற எங்கள் தந்தையே, உமது பெயர் தூயதெனப் போற்றப்பெறுக! ..... மத் 6:7-9

### திருவிவிலியத்தில் சொல்லப்பட்டிருப்பவை அனைத்தும் உண்மையா?

இந்தகேள்விக்கு நேரடியாக பதில் சொல்ல இயலாது. திருவிவிலியம் என்பது கடவுளின் வார்த்தை. எழுதப்பட்ட அனைத்தும் கடவுளால் தூண்டப்பட்டு எழுதப்பட்டிருந்தாலும், எழுத்து வடிவில் எழுதியது மனிதரே. தனிப்பட்ட ஒரு ஆசிரியரோ அல்லது ஒரு சமூகமோ தங்கள் இறைஅனுபவத்தை வார்த்தையாக்கிய உன்னதமான நூல். விசுவாச அடிப்படையில் இதில் **தவறு ஏதும் இல்லை**. விவிலியத்தில் அடங்கியிருப்பது மீட்பு பற்றிய செய்தியாகும். கடவுள் மனிதரை ஏன் படைத்தார்? மனித வாழ்கையின் குறிக்கோள் என்ன? அக்குறிக்கோளை அடைவது எப்படி, இவைபோன்ற கேள்விகளுக்குப் பதில் தருகின்ற போது தவறான போதனையைத் தருவதில்லை. இது ஒரு விசுவாச நூலானதாலும், மனிதரால் பல்வேறு காலக்கட்டத்தில் எழுதப்பட்டு தொகுக்கப்பட்ட நூல் என்பதாலும், தரப்படுகின்ன எல்லா தகவல்களும் அறிவியல் ரீதியாகவும் சரித்திர ரீதியாகவும் 100

விழுக்காடு சரியானவைகளாக இருக்கவேண்டுமென்ற அவசியமில்லை. மனித அறிவின் எல்லைக்கு உட்பட்டே அந்த நூல்கள் உருவாகின. விவிலிய நூல்கள் சமய நம்பிக்கையின் அடிப்படையில் உருவாகி வளர்ந்தவை. அவற்றில் காணப்படும் செய்தி சமய நம்பிக்கையை நம்மில் வளர்ப்பதற்காக அமைந்ததே தவிர, நமக்கு அறிவியல் சார்ந்த கருத்துக்களை வழங்குவதற்காகவோ வரலாற்று நிகழ்ச்சிகளை விமர்சிப்பதற்காக எழுதப்படவில்லை. குறிப்பாக வரலாற்று காலத்திற்கு முற்பட்ட நிகழ்சிகளை (தொடக்க நூலில் ஆபிரகாமிற்கு முந்திய பகுதிகள்) விவரிக்கின்ற பகுதிகள் விசுவாசம் சார்ந்த உண்மைகளை விளக்குவதற்காக பல்வேறு பாரம்பரியங்களில் உலவிவந்த செய்திகளின் தொகுப்பு எனலாம். பழைய ஏற்பாட்டின் முதல் ஐந்து நூல்களும் முதலில் பாரம்பரியமாக சொல்லப்பட்டவைகளின் அடிப்படையில் எழுந்த பாரம்பரிய செய்திகள் பின்னர் பல நூறு ஆண்டுகளுக்குப் பிறகு எழுத்து வடிவில் எழுதப்பட்டவை. பின்னர் பல நூற்றாண்டுகளில் தொகுக்கப்பட்டவை. எனவே, கடவுள் மனிதருடைய முழுநலனுக்காக எதைஎதை எல்லாம் நமக்கு வழங்க விரும்பினாரோ அவைகள் மட்டுமே விவிலியத்தில் உள்ளது என நாம் ஏற்றுக்கொள்கிறோம். விவிலியத்தின் எந்த பகுதியையும் வார்த்தைக்கு வார்த்தை பொருள் கொண்டால் அது சரியான பொருளை உணர்த்தாது. எந்த ஒரு பகுதியும் அதன் ஆசிரியர் என்ன நோக்கத்தோடு எழுதினார்; அதன் பின்னி என்ன; அதன் முழுமையான பொருள் என்ன; என்பதை அறிந்தே அதன் உண்மைப் பொருளை உணரமுடியும். இதற்கு, பாரம்பரியம் (அவ்விவிலியப் பகுதி அக்கால மக்களால் புரிந்து கொள்ளப்பட்ட முறை) மிக முக்கியம். அதை சரியான முறையில் புரிந்து கொள்ள திருச்சபையின் மறைவல்லுனர்களின் விளக்கமும், திருச்சபையின் அதிகாரப்பூர்வ விளக்கமும் ((Magisterium)) பெரிதும் உதவும்.

> நீ குழந்தைப் பருவம் முதல் திருமறைநூலைக் கற்று அறிந்திருக்கிறாய். அது இயேசு கிறிஸ்துவின் மீதுள்ள நம்பிக்கையால் உன்னை மீட்புக்கு வழி நடத்தும் ஞானத்தை அளிக்க வல்லது. மறைநூல் அனைத்தும் கடவுளின் தூண்டுதல் பெற்றுள்ளது. அது கற்பிப்பதற்கும் கண்டிப்பதற்கும் சீராக்குவதற்கும் நேர்மையாக வாழப் பயிற்றுவிப்பதற்கும் பயனுள்ளது. -2திமோத்தேயு 3:15-16

### கடவுள் எதற்காக உலகைப் படைத்தார்?

அன்பே உருவானவர் கடவுள். அந்த அன்பை பகிர்ந்து கொள்ள கடவுள் உலகையும் மனிதனையும் படைத்தார். உலகையும் அதில் உள்ள உயிரினங்கள் அனைத்தையும் படைத்து இறுதியாக மனிதனையும் படைத்து அனைத்தையும் மனிதனுக்குக் கொடுக்கிறார். இயற்கையோடும், மற்ற விலங்குகளோடும், மற்ற மனிதர்களோடும் மனிதன் அன்பிபோடும் மகிழ்ச்சியோடும் வாழ்ந்து இறைப் பதம் அடையவே கடவுள் உலகைப் படைத்தார்.

> அப்பொழுது கடவுள், "மானிடரை நம் உருவிலும், நம் சாயலிலும் உண்டாக்குவோம். அவர்கள் கடல் மீன்களையும், வானத்துப் பறவைகளையும், கால்நடைகளையும், மண்ணுலகு முழுவதையும், நிலத்தில் ஊர்வன யாவற்றையும் ஆளட்டும்" என்றார். -தொடக்கநூல் 1:26

### கடவுள் எவ்வாறு உலகைப் படைத்தார்?

எந்தப் பொருளையும் நாம் உண்டாக்குவதற்கு ஏதாவது ஒரு மூலப் பொருள் தேவை. ஆனால் கடவுள் ஒன்றுமில்லாமையிலிருந்து அனைத்தையும் உண்டாக்கினார். கடவுளால் முடியாதது ஒன்றுமில்லை.

> தொடக்கத்தில் கடவுள் விண்ணுலகையும், மண்ணுலகையும் படைத்தபொழுது,மண்ணுலகு உருவற்று வெறுமையாக இருந்தது. ஆழத்தின் மீது இருள் பரவியிருந்தது. நீர்த்திரளின்மேல் கடவுளின் ஆவி அசைந்தாடிக் கொண்டிருந்தது. அப்பொழுது கடவுள், "ஒளி தோன்றுக!" என்றார்; ஒளி தோன்றிற்று. கடவுள் ஒளி நல்லது என்று கண்டார். -தெடக்கநூல் 1:1-3

### மனிதரின் இரத்தத்தை உறிஞ்சி நோயையும், தூக்கமின்மையையும் ஏற்படுத்துகிற "கொசு" க்களைப் ஏன் கடவுள் படைத்தார்?

எல்லா உயிரினங்களும் ஒன்றை ஒன்று சார்ந்து வாழ்கின்ற நியதி இறைவன் கொடுத்த நியதி. அவை ஒன்றுக்கொன்று உதவிசெய்கின்றன. ஒருவேளை தனிப்பட்ட ஒரு பூச்சியோ விலங்கோ மனிதருக்கு நேரடியாக உதவிசெய்யவில்லை என்றாலும் மற்ற உயிரினங்களுக்கு உதவி செய்யவோ அல்லது உணவாகவோ கடவுள் அவைகளைப் படைத்திருக்கிறார். ஆனால் கொசுவைப் படைத்த கடவுள் அதன் கடியிலிருந்து பாதுகாத்துக்கொள்ள ஆயிரம் வழிமுறைகளைக் கொடுத்திருக்கிறார்.

> எனவே, நீ நீதியையும் நியாயத்தையும் நேர்மையையும் நலமார்ந்த நெறிகள் அனைத்தையும் தெரிந்துகொள்வாய்.ஞானம் உன் உள்ளத்தில் குடிபுகும்; அறிவு உன் இதயத்திற்கு இன்பம் தரும். அப்பொழுது, நுண்ணறிவு உனக்குக் காவலாய் இருக்கும்; மெய்யறிவு உன்னைக் காத்துக்கொள்ளும். -நீதிமொழிகள் 2:9-11

### மூட்டைபூச்சியையும் கடவுள் படைத்தார் எனில் அதை நாம் நசுக்குவது சரியா?

எல்லா உயிரினங்களுக்கும் அதிபதியாக மனிதரைப் படைத்தாலும் நாம் விரும்பியவாறு உயிரினங்களை கொல்ல அல்லது கொடுமைப்படுத்த, மனிதருக்கு உரிமையில்லை. அவைகளும் வாழவேண்டுமென்றே கடவுள் படைத்துள்ளார். இருந்தாலும் நமது உணவிற்காக கொல்வதும் அல்லது நமது அன்றாட வாழ்விற்கு பெரும் இடைஞ்சலாக இருக்கும் சூழ்நிலைகளில் அதை அப்புறப்படுத்துவதுவதோ அல்லது கொல்வதோ குற்றமாகாது. ஈக்கள் வாழ வேண்டிய இடம் நமது வீடு அல்ல. அதனால் வீட்டிற்குள் புகும் ஈக்களையெல்லாம் கொல்வதும் சரியான செயல் ஆகாது. ஈக்கள் வராமலிருக்க நாம் சுற்றுப்புறங்களை சுத்தமாக வைத்துக்கொள்வதும் உணவு வகைகளை மூடிவைப்பதும் நாம் செய்யும் மேலான செயல்களாகும். நமக்குத் தீங்கிளைக்கும் விலங்குகளை கொல்லாமல், அவைகளிலிருந்து நம்மை பாதுகாத்துக்கொள்ளும் வழிமுறைகளைச் செய்வதே சரியான வழியாகும். கூடுகட்டும் சிலந்திப் பூச்சிகளை அழிப்பதை விட்டு விட்டு அவை கூடுகட்டாமலிருக்க அடிக்கடி சுத்தம் செய்வது நற்செயலாகும். தலைமுடியில் வாழும் பேனுக்கும், மூட்டை பூச்சிக்கும் இது பொருந்தும்.

> கடவுள் அவர்களுக்கு ஆசி வழங்கி, "பலுகிப் பெருகி மண்ணுலகை நிரப்புங்கள்; அதை உங்கள் ஆற்றலுக்கு உட்படுத்துங்கள்; கடல் மீன்கள், வானத்துப் பறவைகள், நிலத்தில் ஊர்ந்து உயிர் வாழ்வன அனைத்தையும் ஆளுங்கள்" என்றார். -தொடக்க நூல் 1:28

### டார்வின் "பரிணாம வளர்ச்சி" கோட்பாடு ஏற்றுக்கொள்ளும்படியாக இருக்கிறதே! அதை ஏற்றுக்கொள்ளலாமா?

மூன்றுகாரணங்களுக்காக டார்வின் பரிணாம வளர்ச்சி கொள்கை (மனிதர் விலங்கிலிருந்து தோன்றினான்) ஏற்றுக்கொள்ளும் படியாகத் தோன்றுகிறது. 1. கடவுளுடைய படைப்பையும், இரண்டு மனிதரிடமிருந்து மனித குலம் தோன்றியது என்னும் விலிவிய கருத்தை ஏற்றுக்கொள்ளத் தயங்கும் போது. 2. விஞ்ஞான ஆய்வு மூலம் கண்டுபிடிக்கப்பட்ட எலும்புக் கூடுகள், பரிணாம வளர்ச்சிக் கோட்பாடோடு ஒத்துப் போகிறதினாலும் 3. அனேகர் பரிணாம வளர்ச்சிக் கோட்பாட்டை ஏற்றுக்கொள்வதனாலும். விவிலிய கருத்தை புறக்கணிக்கலாம்.ஆனாலும் டார்வினின் பரிணாம வளர்ச்சி கொள்கையின் ஆரம்பம் "ஒரு செல்" எப்படி தோன்றியிருக்கமுடியும் என்பதற்கான விளக்கம் சரியாக இல்லை. மேலும் மனிதன் என்பவன் விலங்குகளின் மேல் நிலை என்பதை ஒத்துக்கொள்ள இயலாது. மனிதருக்கு மட்டுமே உள்ள ஆன்மாவும், ஆறாவது அறிவான சிந்தித்து செயல்படும் ஆற்றலும் நல்லது கெட்டது அறியும் திறனும் எந்த விலங்கிலும் காண இயலாது, இது பரிணாம வளர்ச்சி என்றும் கூற முடியாது.திருவிவிலியத்தில் கடவுள் மனிதரைப் படைத்தார் அதுவும் தமது சாயலாகப் படைத்தார் என்று சொல்லப்பட்டிருக்கின்றது. மனிதர் படைப்பின் சிகரமாக இருக்கின்றான். விவிலியத்தில் கூறப்படுவது போல் கடவுள் மனிதனைப் படைத்தாரா என்று யாருக்கும் தெரியாது. ஆனால் அதில் சொல்லப்பட்டிருக்கும் செய்தி உண்மையானது. கடவுள் தான் உலகையும் அதன் உயிரினங்களையும் மனிதரையும் படைத்தார். மனிதரை தம் சாயலாகப் (அன்புசெய்யும் ஆற்றல் படைத்த ஆன்மாவையும்) படைத்தார். மனிதன் கடவுளின் அன்பினின்று பிரிந்து பாவம் செய்தான். பெற்ற அருள் வாழ்வை இழந்தான். எனவே பாவத்திலிருந்து மனிதரை மீட்க, மீட்பின் திட்டத்தையும் கடவுள் கொடுத்தார் என்பதே நமது விசுவாசம்.ஆக இறைவனின் படைப்பு, மனிதனின் வீழ்ச்சி, மனித மீட்பு இம்மறை உண்மைகளை மறுக்காத வரையில் பரிணாம வளர்ச்சி கோட்பைட்டை நாம் ஏற்றுக்கொள்வதில் தவரில்லை.

Pope Pius XII in his encyclical �Humani Generis� (1950) explains that, in conformity with the current state of human sciences and sacred theology, the church has no problem with research and discussions among those experienced in both science and theology with regard to the doctrine of evolution insofar as it inquires into the origin of the human body as coming from pre-existent living matter.

The Church has no problem witht he theory of evolution and its research, provided of course, that we understand by evolution a process directed by God, not by chance. As long as the theory of evolution does not exclude God as the creator and director of the process of evolution, it does not contradict the biblical revelation. �For Catholic faith obliges us to hold that souls are immediately created by God.�

It was Darwin�s researches and writings that brought evolution to recognition as the prevailing scientific conception of nature. Although he deferred to the existence of God in an agnostic sort of way, he assigned the practical lordship in the world of nature to the �principle of change.� By allowing a possible divine origination of the �primal protozoa� from which all other forms took their rise, Charles Darwin paid token respect to the existence of God. The Church has always taught, and still teaches, that the spiritual part of each human being, what we call the soul, can only come into existence through a �direct creative act of God.�

### சிலநேரங்களில் குழந்தைகளும் சிறார்களும் ஏன் இறக்கின்றனர்?

பிறந்த எல்லாமே இறக்கவேண்டும் என்பது கடவுளின் நியதி. தீயது நினைக்காத, செய்யாத மரம் செடி, கொடி விலங்குகள் உட்பட அத்தனைக்கும் இது பொருந்தும். மனித உடல் இறந்தாலும் ஆன்மா இறப்பதில்லை என்பது கிறிஸ்தவ விசுவாசம். மனிதர் நோயினால், விபத்தினால், இயற்கையின் சீற்றத்தால் எப்படிவேண்டுமானாலும் இறக்கலாம். ஒருவரின் இறப்பை வைத்து வாழ்கையை நாம் தீர்ப்பிட இயலாது. ஒருசிலருக்கு 1 மாதமோ அல்லது 5 வருடமோ 50 வருடமோ அல்லது 100 வருடமோ கடவுள் கொடுக்கின்றார். இவ்வுலக வாழ்க்கை மிகவும் குறுகியது. கடவுள் நமக்கு கொடுத்திருக்கும் ஒவ்வொறு வினாடிக்கும் நாம் நன்றி செலுத்த வேண்டும். இவ்வுலக வாழ்கையே கதி என்றிறாமல் நமக்குக் கொடுக்கப் பட்டிருக்கின்ற நேரத்தையும் வாய்ப்புக்களையும், திறமைகளையும், அருட்செல்வத்தையும் பொருள் செல்வத்தையும் பயன்படுத்தி விண்ணுலக செல்வத்தை சம்பாதித்துக்கொள்ள வேண்டும். இவ்வுலக வாழ்கைக்குப் பின் நிலையான மறுஉலக வாழ்வு உண்டு. இறப்பு என்பது மறுஉலக வாழ்வின் பிறப்பு.

ஏனெனில் நான் வாழ்ந்தால் அது கிறிஸ்துவுக்காகவே; நான் இறந்தால் அது எனக்கு ஆதாயமே.எனினும் நான் தொடர்ந்து வாழ்ந்தால் பயனுள்ள பணி செய்ய முடியும். எனவே நான் எதைத் தேர்ந்துகொள்வதென எனக்குத் தெரியவில்லை. இந்த இரண்டுக்குமிடையே ஒரு இழுபறி நிலையில் உள்ளேன். உயிர் நீத்துக் கிறிஸ்துவோடு இருக்க வேண்டும் என்னும் ஆவல் ஒரு புறம். - இதுவே மிகச் சிறந்தது. -ஆனால், இன்னும் வாழவேண்டும் என்பது மற்றொரு புறம். - இது உங்கள் பொருட்டு மிகத் தேவையாய் இருக்கின்றது. -பிலிப்பியர் 1:21-24

### உயிர் சேதமும் பொருட்சேதமும் மனத்துயரையும் வறுமையையும் விளைவிக்கின்ற "போர்" ரை கடவுள் ஏன் அனுமதிக்கின்றார்?

போர் என்பது கடவுள் அனுமதிக்கின்ற ஒன்று இல்லை. மனிதனின் சுய நலத்தினாலும் அகம்பாவத்தினாலும்#2950;ணவத்தினாலும் கோபமிகுதியாலுமே போர் நிகழ்கிறது. கடவுளின்சித்தம் யாரும் யாரையும் கொல்ல வேண்டுமென்பதில்லை. அனைவரும் கடவுளின் அன்புப்பிள்ளைகளாக வாழ கடவுள் ஆசிக்கின்றார்.

உங்களிடையே சண்டை சச்சரவுகள் ஏற்படக் காரணமென்ன? உங்களுக்குள்ளே போராடிக்கொண்டிருக்கும் சிற்றின்ப நாட்டங்கள் அல்லவா? நீங்கள் ஆசைப்படுவது கிடைக்காததால் கொலை செய்கிறீர்கள்; போராசை கொள்கிறீர்கள்; அதைப் பெற முடியாததால் சண்டை சச்சரவு உண்டாக்குகிறீர்கள். அதை நீங்கள் ஏன் பெறமுடிவதில்லை. நீங்கள் கடவுளிடம் கேட்பதில்லை. யாக்கோபு 4:1-2

### கோவிலுக்கே செல்லாதவர்களின் நிலை என்ன?

கோவிலுக்குச் செல்வதால் மட்டுமே மோட்சம் சென்றுவிடமுடியாது. அல்லது கோவிலுக்குச் செல்லாதவர்கள் அனைவரும் நரகத்திற்குச் செல்வார்கள் என்று கூறிவிடவும் முடியாது. கிறிஸ்தவன் தன்னுடைய விசுவாசத்தாலும் வாழ்கையாலுமே கிறிஸ்தவனாக முடியும். கிறிஸ்துவில் வாழ வழிகாட்டுதலும் பலமும் சக்தியும் கோவிலில் கிடைக்கிறது. அதோடு நாம் அனைவரும் கடவுளின் அன்புமக்கள் என்ற உணர்வும் அனைவரும் சேர்ந்து ஜெபிக்கும் பேறும் நமக்கு கிடைக்கிறது. கோவிலுக்குச் செல்லாதவர்கள் இதைஎல்லாம் இழந்து நிற்கின்றார்கள்.

இக்காலத்தில் தமது நீதியைக் கடவுள் பொறுமையோடு காட்டி வருகிறார். ஆம், அவர் நீதியுள்ளவர். இயேசுவின்மீது நம்பிக்கை கொள்வோரைத் தமக்கு ஏற்புடையவராக்கி வருகிறார். அப்படியிருக்க, பெருமை பாராட்ட இடமேது?

இடமில்லை. எந்த அடிப்படையில் பெருமைபாராட்ட இடமில்லை? செயல்களின் அடிப்படையிலா? இல்லை; நம்பிக்கையின் அடிப்படையில்தான். ஏனெனில் திருச்சட்டம் சார்ந்த செயல்களால் அல்ல, இயேசுவின்மீது வைக்கும் நம்பிக்கையின் வாயிலாகவே எவரும் கடவுளுக்கு ஏற்புடையவராக முடியும் எனக் கருதுகிறோம். - உரோமையர் 3:26-28

### வானதூதர்களை கடவுள் படைத்ததாக விவிலியத்தில் சொல்லப்படவில்லை. அவர்களைப் படைத்தது யார்?

நாயை கடவுள் படைத்ததாக விவிலியத்தில் சொல்லப்படவில்லை. இருந்தாலும் கடவுள்தான் நாயைப் படைத்தார். ஏனெனில் அனைத்தையும் படைத்தவர் கடவுளே! உடல் ஏதும் இல்லாமல் சுத்த அரூயஅp;பியான வானதூதர்கள் உட்பட.

அவருடைய தூதர்களே, நீங்கள் யாவரும் அவரைப் போற்றுங்கள்; அவருடைய படைகளே, நீங்கள் யாவரும் அவரைப் போற்றுங்கள். அவை ஆண்டவரின் பெயரைப் போற்றட்டும்; ஏனெனில், அவரது கட்டளையின்படி எல்லாம் படைக்கப்பட்டன. -திருப்பாடல்கள் 147:2,5

### எரியுட்டப்பட்ட உடலை கடவுள் எவ்வாறு உயிர்பிக்கமுடியும்?

நம்மைப்படைத்தவர் கடவுள். நம்மை உண்டாக்கிய கடவுள் நாம் மண்ணில் மக்கினாலும், சாம்பலாகப் புதைந்தாலும் நம் உடலை உயிர்ப்பிக்கவல்லவர். உயிர்தெழும் போது அது சாதாரண உடலாக இருக்காது. மகிமைபெற்ற மாற்றுருபெற்ற உடலாகவே அது விண்ணகம் செல்லும்.

சகோதர சகோதரிகளே! இறந்தோரைப் பற்றி நீங்கள் அறிந்திருக்க வேண்டும் என நாங்கள் விரும்புகிறோம்; எதிர்நோக்கு இல்லாத மற்றவர்களைப் போல் நீங்களும் துயருறக் கூடாது. இயேசு இறந்து உயிர்த்தெழுந்தார் என நாம் நம்புகிறோம். அப்படியானால், இயேசுவோடு இணைந்த நிலையில் இறந்தோரைக் கடவுள் அவருடன் அழைத்து வருவார். -1தெசலோனிக்கர் 4:13-14.

### மோட்சம் நரகம் உண்டா? அது எப்படிஇருக்கும்?

மோட்சம் நரகம் கட்டாயம் உண்டு. ஏனெனில் இறுதித் தீர்ப்பின்போது கடவுள் நல்லவர்களுக்கு முடிவில்லா வாழ்வையும் தீயவர்கள் தண்டனைக்கும் உள்ளாவர் என்பதை சொல்லியிருக்கிறார். ஆனால் அந்த மோட்சத்தையும் நரகத்தையும் நாம் கற்பனை செய்து பார்க்க இயலாது. நல்லவர்கள் கடவுளோடு அமர்ந்து, கடவுளை என்றும் நேரடியகப் பார்க்கும் முடிவில்லா மகிழ்ச்சி நிலையைப் பெறுவர். தீயவர்களோ கடவுளைக் காண இயலா பெரும் துன்ப நிலையை அடைவர். அதிலிருந்து அவர்களால் மீள இயலாத துன்ப நிலை.இவைகளை மனித கற்பனையாக எப்படி வேண்டுமானாலும் சித்தரிக்கலாம்.

பின்பு அரியணையில் வீற்றிருக்கும் அரசர் தம் வலப்பக்கத்தில் உள்ளோரைப் பார்த்து," என் தந்தையிடமிருந்து ஆசி பெற்றவர்களே, வாருங்கள்; உலகம் தோன்றியது முதல் உங்களுக்காக ஏற்பாடு செய்யப்பட்டிருக்கும் ஆட்சியை உரிமைப்பேறாகப் பெற்றுக்கொள்ளுங்கள்.பின்பு இடப்பக்கத்தில் உள்ளோரைப் பார்த்து, "சபிக்கப் பட்டவர்களே, என்னிடமிருந்து அகன்று போங்கள். அலகைக்கும் அதன் தூதருக்கும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிற என்றும் அணையாத நெருப்புக்குள் செல்லுங்கள். -மத்தேயு 25:34,41

### விவிலியத் தீவிரவாதிகள் என்பவர் யார்?

20ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பிரிவினைச் சபைகளுக்குள்ளே தோன்றியது விவிலியத் தீவிரவாதம் ((�Biblical Fundamentalism�)) என்னும் ஒரு போக்கு. விவிலியத் தீவிரவாதத்தின் படி விவிலியத்தை படித்து புரிந்து கொள்ளவோ அல்லது விளக்கம் கூறவோ விவிலியம் ஒன்றே போதும். ஆகவே விவிலிய வார்த்தைகளை அப்படியே புரிந்து கொள்ளவேண்டும் ((literal meaning and interpretation)) என்பது அவர்களது வாதம்.

கத்தோலிக்கத் திருச்சபையில் விவிலியத்திற்கு முன்பாகவே பாரம்பரியம் இருப்பதால் பாரம்பரிய செய்திகள், ஏற்கனவே மறைவல்லுனர்கள் விவிலியத்தை விளக்கிய தொகுப்புகள், பாரம்பரிய நடைமுறை வழக்கங்கள் ஆகியவற்றையும் கருத்தில் கொள்ளப்பட்டு விவிலிய பகுதிகளுக்கு விளக்கம் தரப்படுகிறது.

இயேசு செய்தவை வேறு பலவும் உண்டு. அவற்றை ஒவ்வொன்றாக எழுதினால், எழுதப்படும் நூல்களை உலகமே கொள்ளாது எனக் கருதுகிறேன். -யோவான் 21:25

### கத்தோலிக்கத் திருச்சபையில் பிரிவுகள் உண்டா?

இயேசு கிறிஸ்துவால் நிறுவப்பட்ட, அப்போஸ்தலர் பேதுருவிடம் ஒப்புவிக்கப்பட்ட, அவர்களின் வழிவந்த திருத்தந்தையால் வழிநடத்தப்படுவரும் கத்தோலிக்கத் திருச்சபை ஒன்றுதான். கத்தோலிக்கத் திருச்சபையில் பல ரீதிகள் (வழிபாட்டு முறையில் மாறுபட்ட வகையில்) இருக்கின்றன. லத்தீன் ரீதி, பசாட்டைன் ரீதி, கோப்திக் ரீதி, எத்தியோப்பிய ரீதி, கல்தீன் ரீதி, அர்மீனியர் ரீதி, சீரோ மலபார், சீரோ மலங்கரா, சீரியன் ரீதி. இவை அனைத்துதும் ஒரே கத்தோலிக்க விசுவாசத்தை அறிக்கையிடுபவை. ஆனால் வழிபாட்டு முறைகள் வேறுபடும்.

The Rites of Eastern and Western Christianity emerged in close association with developments and conflicts that took place within the history of he Church. In the East, the cities of Antioch and Alexandria emerged as centers of power and influence for the early Christian communities. As such, they served as points from which the various Eastern Rites developed. Jerusalem and Constantinople (the capital of the empire) also exerted their strong influence in the formation of these Rites. The Byzantine Rite which came from Constantinople but developed in Antioch became the most popular of the Eastern rites followed by Maronite, Armenian and Coptic.

Beginning at the end of the 16th century, groups of Eastern Orthodox Christians entered into union with the see of Rome (Papacy). They are called Eastern Catholics. They retained most of its original liturgical, canonical, and theological tradition.

### கடவுள் பாவிகள் உட்பட அனைவரையும் நிபந்தனையற்ற முறையில் அன்புசெய்கின்றார் எனில் நரகம் என்று ஒன்று எதற்கு?

கடவுள் அனைவரையும் நிபந்தனையற்ற வகையில் அன்புசெய்வது உண்மைதான். ஆனால் அனைவருக்கும் நிபந்தனையற்ற மீட்பை கொடுப்பதில்லை. மனிதனுக்கு கடவுளை அன்புசெய்யவும் அல்லது புறக்கணிக்கவும் கூடிய அளவில்லா சுதந்திரத்தை கொடுத்திருக்கிறார். கடவுள் மனிதரை அடிமையாகவோ அல்லது சொன்னதை செய்யக்கூடிய இயந்திர மனிதராகவோ படைக்கவில்லை. கடவுள் மனிதரை அன்பில் வாழ கட்டாயப்படுத்துவதில்லை. அன்பு என்பது மனிதனின் இதயத்திலிருந்து தானாக வெளிப்படவேண்டும்.. ஏனெனில் மனிதன் கடவுளின் அன்புருவாக படைக்கப்பட்டிருக்கின்றான். நம்மிடம் கடவுள் எதிர்பார்ப்பது நாம் அனைவரும் சுதந்திர மக்களாக கடவுளன்பில்

வாழவேண்டுமென்பதே. இத்தகைய அன்பைப் புறக்கணிப்போர் கடவுளைப் புறக்கணிக்கின்றனர். கடவுளுடைய அன்புறவை தெரிந்தே புறக்கணிப்பர்கள் நரகத்திற்குச் செல்வார்கள்.

### IHS, PX, INRI என்பவைகள் என்ன?

**IHS** "இயேசு" எனும் பெயரின் கிரேக்க எழுத்தின் முதல் மூன்று எழுத்துக்கள். Iησούς ((iota-eta-sigma)) இரண்டாம் எழுத்து eta லத்தின் ஒலிபெயர்ப்பில் **H** ஆயிற்று. (IHS is derived from the first three letters of the Greek name of Jesus, *iota-eta-sigma* or IHΣ. Here the Greek letter *eta* was transliterated as the letter *H* in the Latin-speaking West (Greek *eta* and Latin-alphabet *H* had the same visual appearance and shared a common historical origin), while the Greek letter *sigma* was either transliterated as the Latin letter *C* (due to the visually-similar form of the lunate sigma), or as Latin *S* (since these letters of the two alphabets wrote the same sound). Because the Latin-alphabet letters *I* and *J* were not systematically distinguished until the 17th century, "JHS" and "JHC" are equivalent to "IHS" and "IHC".)

"IHS" is sometimes interpreted as meaning *Iesus Hominum Salvator* ("Jesus, Savior of men", in Latin), or connected with *In Hoc Signo*. Some uses have even been created for the English language, where "IHS" is interpreted as an abbreviation of "I Have Suffered" or "In His Service". Such interpretations are known as backronyms.

PX என்பது "கிறிஸ்து" (மீட்பர்) Χριστός எனும் கிரேக்க வார்த்தையின் முதல் இரண்டு (xp) (chi-rho) எழுத்துக்கள்.

"INRI" என்பது லத்தின் மொழியில் "Iesus Nazarenus Rex Iudaeorum" என்பதன் முதல் எழுத்துக்கள். அதன் பொருள் "நாசரேத்து இயேசு யூதர்களின் அரசன்" ("Jesus of Nazareth King of Jews.") இந்த வார்த்தைகள் இயேசுவை சிலுவையில் அறைந்த பின் சிலுவையில் மேல் பகுதியில் குற்ற அறிக்கையாக எபிரேயம், இலத்தீன், கிரேக்கம் ஆகிய மொழிகளில் எழுதப்பட்டிருந்தது.

### விசுவாசத்தால் மட்டுமே மீட்பு பெற முடியுமா?

16ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கத்தோலிக்க குருவாக இருந்த மார்டின் லூதர் கத்தோலிக்கத் திருச்சபையில் மறுமலர்ச்சி இயக்கத்தை ஆரம்பித்தார். அதன்படி கிறிஸ்தவர்கள் மீட்படைய விசுவாசம் (இயேசு கிறிஸ்துவின் மேல் பற்றுறுதி, நம்பிக்கை) ஒன்றே போதும் நம்முடைய எந்த முயற்சிகளும் நற்செயல்களும் மனிதருக்கு மீட்பை தராது என்பது அவரது வாதம். அதற்கு ஆதாரமாக அவர் கூறிய விவிலியப் பகுதிகள்: ரோமையர் 3:20-22, 5:1, 5:9, கலாத்தியர் 2:16, 3:11. இன்னும் இதைப்போன்ற பகுதிகள். இந்தப் பகுதிகள் அனைத்தும் பழைய ஏற்பாட்டு சட்டமும் அல்லது சட்டங்களைக் கடைப்பிடிப்பதாலும் நமக்கு மீட்பைத் தருவதில்லை மாறாக இயேசு கிறிஸ்துவின் மேல் உள்ள பற்றுறுதியே நம்மை கடவுளுக்கு ஏற்புடையவராக்கும் என்பதை பவுல் இப்பகுதிகளில் வலியுறுத்துகிறார். (பின்னர் மார்டின் லூதர் விவிலியத்தை விளக்க விவிலியம் மட்டுமே போதும், மேலும் நற்கருணையில் இறைபிரசன்னம் இல்லை, குருக்கள் மணத் துறவு காணத்தேவை இல்லை, பாப்பரசர் அப்போஸ்தலர்களின் வழிவந்தவர் அல்ல மற்றும் ஞான அதிகாரம், தவராவரமில்லை என்று சொல்லி தனியாகப் பிரிந்து சென்றார்.)

உண்மைதான். சட்டத்தை கடைப்பிடிப்பதால் மட்டுமே மீட்படைய முடியாது. இயேசு கிறிஸ்துவே இக்கருத்தை ஆழமாகச் சொல்லியிருக்கிறார். இயேசு கிறிஸ்துவின் காலத்தில் வாழ்ந்த யூதர்கள் மோயீசனின் சட்டங்களை மிக நுனுநுனுக்கமாக கடைப்பிடித்து வந்தார்கள். அவ்வாறு செய்வதே மோயீசன் வழியாக இறைவன் தங்களுக்கு கொடுத்த கட்டளையாக அதை கடைப்பிடித்து வந்தார்கள். கோவிலில் காணிக்கை செலுத்தவேண்டுமென்பது மோயீசன் கொடுத்த கட்டளை. அதை யூதர்கள் சிரமேல் கொண்டு கடைப்பிடித்து வந்தார்கள். ஆனால் இயேசு புதிய கட்டளை கொடுக்கின்றார். நீங்கள் உங்கள் காணிக்கையைப் பலிபீடத்தில் செலுத்த வரும்பொழுது உங்கள் சகோதரர் சகோதரிகள் எவருக்கும் உங்கள் மேல் ஏதோ மனத்தாங்கல் உண்டென அங்கே நினைவுற்றால், அங்கேயே பலிபீடத்தின்முன் உங்கள் காணிக்கையை வைத்து விட்டுப் போய் முதலில் அவரிடம் நல்லுறவு ஏற்படுத்திக் கொள்ளுங்கள். பின்பு வந்து உங்கள் காணிக்கையைச் செலுத்துங்கள் என்கிறார் இயேசு. (மத்தேயு 5 :23-24). கடவுளுக்கு காணிக்கை செலுத்துவதை விட சகோதரரிடம் அன்புறவே முக்கியம் என்கிறார். அன்பு இரக்கம் பரிவு ஆகியவைகளைக் கடைப்பிடிக்காமல் சட்டத்தை மட்டுமே போதித்த பரிசேயர்களை சதுசேயர்களை வெள்ளையடிக்கப்பட்ட கல்லறைகள் என்கிறார் இயேசு.

பின்பு அரியணையில் வீற்றிருக்கும் அரசர் தம் வலப்பக்கத்தில் உள்ளோரைப் பார்த்து," என் தந்தையிடமிருந்து ஆசி பெற்றவர்களே, வாருங்கள்; உலகம் தோன்றியது முதல் உங்களுக்காக ஏற்பாடு செய்யப்பட்டிருக்கும் ஆட்சியை உரிமைப்பேறாகப் பெற்றுக்கொள்ளுங்கள். ஏனெனில் நான் பசியாய் இருந்தேன், நீங்கள் உணவு கொடுத்தீர்கள்; தாகமாய் இருந்தேன், என் தாகத்தைத் தணித்தீர்கள்; அன்னியனாக இருந்தேன், என்னை ஏற்றுக் கொண்டீர்கள்;நான் ஆடையின்றி இருந்தேன், நீங்கள் எனக்கு ஆடை அணிவித்தீர்கள்; நோயுற்றிருந்தேன், என்னைக் கவனித்துக் கொண்டீர்கள்; சிறையில் இருந்தேன், என்னைத் தேடி வந்தீர்கள்" என்பார். (மத்தேயு 25:34-36) ஆக நற்செயல்கள் கட்டாயம் தேவை என்பதை நமக்கு விளக்குகிறது.

மேலும் அதே புனித பவுல் அடியார் ரோமையருக்கு எழுதிய மடலின் பின் பகுதிகளில் அதிகாரம் 12, 13, 14 அனைத்துப் பகுதிகளிலும் நாம் திருமுழுக்கின் வழியாக இறைவனுக்கு ஏற்புடையவராக்கப்பட்ட நாம், அதில் நிலைத்து வாழ என்னென்ன செய்ய வேண்டும் என்பதைக் மிகத் தெளிவாகக் கூறுகிறார்.

புனித யாக்கோபு தம் மடலில் "அறிவிலிகளே, செயலற்ற நம்பிக்கை பயனற்றது என நான் எடுத்துக்காட்ட வேண்டுமா? நம் மூதாதையாகிய ஆபிரகாமைப் பாருங்கள். தம் மகன் ஈசாக்கைப் பீடத்தின்மேல் பலிகொடுத்தபோது அவர் செய்த செயல்களினால் அல்லவோ கடவுளுக்கு ஏற்புடையவரானார்? அவரது நம்பிக்கையும் செயல்களும் இணைந்து செயல்பட்டன என்றும், செயல்கள் நம்பிக்கையை நிறைவுபெறச் செய்தன என்றும் இதிலிருந்து புலப்படுகிறது அல்லவா? "ஆபிரகாம் ஆண்டவர்மீது நம்பிக்கை கொண்டார். அதை ஆண்டவர் அவருக்கு நீதியாகக் கருதினார்" என்னும் மறைநூல் வாக்கு இவ்வாறு நிறைவேறியது. மேலும் அவர் கடவுளின் நண்பர் என்றும் பெயர் பெற்றார். எனவே மனிதர் நம்பிக்கையினால் மட்டுமல்ல, செயல்களினாலும் கடவுளுக்கு ஏற்புடையவராகின்றனர் எனத் தெரிகிறது. அவ்வாறே, இராகாபு என்ற விலைமகள் தூதர்களை வரவேற்று வேறு வழியாக அனுப்பியபோது, செயல்களால் அல்லவா கடவுளுக்கு ஏற்புடையவரானார்! உயிர் இல்லாத உடல் போல, செயல்களில்லாத நம்பிக்கையும் செத்ததே." - யாக்கோபு 2:20-26

ஆக மீட்புப் பெற இயேசுகிறிஸ்துவின் மேல் விசுவாசமும் (பற்றுறுதி) அதன்மூலம் நாம் பெற்றுக்கொண்ட அருளில் நிலைபெற்று நிற்க நற்செயல்களும் தேவை என்பதே தூய

பவுலின் போதனை. அதையே கத்தோலிக்கத் திருச்சபையும் போதிக்கிறது. (விவிலியத்தின் ஒரு பகுதியை மட்டும் படித்து, அதன் அடிப்படையில் விளக்கமோ, கொள்கை முடிவுகளோ எடுப்பது சரியான முடிவாக அமைய வாய்ப்பில்லை).

### கிறிஸ்தவர் அல்லாத யூதர்களும், இந்துக்களும், முஸ்லிம்களும் மீட்புப் பெறுவார்களா?

மீட்பு பெறுதல் என்பது நாம் கடவுளோடு கொண்டுள்ள அன்புறவைப் பொருத்தது. இந்த அன்புறவு எப்படி ஏற்படும் என்றால் நாம் கடவுள் மீது கொண்டுள்ள பற்றுதியாலும் விசுவாச வாழ்வாலும் நம்மையே நாம் கடவுளுக்கு அர்ப்பணிக்கும் வாழ்கை வாழ்தாலும் எற்படும் உறவாகும். இத்தகைய வாழ்கை வாழ்வதற்கு திருமுழுக்கு என்னும் திருவருட்சாதனத்தின் வழியாக நாம் கடவுளின் அருளைப் பெறுகிறோம். திருமுழுக்கு என்னும் திருவருட்சாதனத்தின் மூலம் நாம் கடவுளின் பிள்ளைகளாகிறோம். நமது அனைத்துப் பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன. கடவுளின் அருளைப் பெற்று கிறிஸ்துவில் புதுவாழ்வு வாழ அழைக்கப்படுகிறோம். ஆதலால் திருமுழுக்கு என்பது மீட்புப் பெற தேவை என்பதில் ஐயமில்லை. ஆனால் திருமுழுக்குப் பெற்றவர்கள் அனைவரும் மீட்பு பெறுவார்கள் என்று உறுதிகூறவும் இயலாது. திருமுழுக்கைப் பெற்றவர் கடவுளிடம் அன்புறவை எற்படுத்தும் செயல்களை செய்யவில்லைஎனில் கடவுளோடுள்ள அன்புறவில் நீடிக்க இயலாமல் போகக்கூடும். அல்லது கடவுளின் விருப்பத்திற்கு மாறாக அவரின் அன்புறவைப் புறக்கணித்து அவரின் கட்டளைகளை மீறி நம் சொந்த விருப்பத்தின் படி வாழ்வதால் கடவுளின் அன்புறவில் நிலைத்து நிற்க இயலாது.

1964 ஆண்டில் நிறைவுபெற்ற இரண்டாம் வத்திக்கான் சங்க கருத்துப்படி "யாரும் தங்களுடைய சொந்த தவறால் அல்லாமல் கிறிஸ்துவை அறியாமல் இருந்தாலும்கூட நேரிய உள்ளத்துடன் கடவுளைத் தேடுகிறவர்களும் அவர்கள் அறிகின்றபடி கடவுளின் விருப்பப்படி வாழ்கிறவர்களும், வாழ்ந்தவர்களும் கடவுளின் மீட்பைப் பெறக்கூடும். இதுவே 'ஆசை திருமுழுக்கு' எனப்படுகிறது.

The Second Vatican Council declared@ “Those who, through no fault of their own, do not know the Gospel of Christ and his Church, but who nevertheless seek God with a sincere heart and try to do His will as they know it through the dictates of their conscience - those, too, may achieve eternal salvation.”

This is known as the “Baptism of Desire.” The wish to please God and to do whatever God desires that person to do implicitly contains the desire of Baptism of water. This, however, should not stop us to help others to find Christ and his Church by living the fundamental truths of our faith. It is our supreme duty to share our faith with others. The Church exists to evangelize.

### ஏழைகளுக்கு உதவவேண்டும் என்று இயேசு கிறிஸ்து கூறியிருக்கிறார். பல இலட்சக்கணக்கான எழைகள் உலகத்தில் இருக்கிறார்கள் இது எவ்வாறு சாத்தியம்?

கடவுள் அன்பும் இரக்கமும் நிறைந்தவர். கடவுள் நமக்கு கொடுத்திருக்கும் கொடைகளுக்கு நன்றி செலுத்துவதோடு நின்றுவிடாமல் நாமும் பிறரிடம் இரக்கத்துடன் நடந்துகொள்வது அவசியம். நம்மால் முடிந்த வரை நமக்கு அருகில் உள்ளவர்கள், உதவி தேவைப்படுவோர் ஆகியோர்க்கு, கட்டாயம் உதவி செய்யவேண்டும். இதுதான் கிறிஸ்தவப் பண்பு. பிறருக்கு உதவும் தர்ம ஸ்தாபனங்களுக்கும் நாம் தாராள உள்ளத்தோடு நடந்துகொள்ளலாம். ஒவ்வொருவரும் இவ்வாறு செய்யும் போது பலர் பயனடையும் வாய்ப்பு உள்ளது.

### உலகம் போய்கொண்டிருக்கிற நிலையைப் பார்த்தால் கடவுளின் மீட்புத் திட்டம் இந்த உலகில் சரிவர நிகழவில்லை என்றுகூறலாமா? இறையரசு மலருமா?

கடவுளின் மீட்புத் திட்டம் கட்டாயம் நிறைவுபெறும். இந்த மீட்புத் திட்டம் நிறைவடையும் நாளில் நாம் அனைவரும் ஒரே சமூகமாக எந்தவித ஜாதி, மத, இன, மொழி மற்றும் எந்தவித வேறுபாடுகளுமின்றி கடவுளின் ஒரே அன்பு சமுதாயமாக மாறும் நாள் வரும். திருவெளிப்பாடு நூலில் சொல்லப்பட்டிருக்கின்ற புதிய வானகமும் புதிய வையகமும் மலரும் நாள் வரும். கடவுள் ஆரம்பித்த அன்பு சமுதாயம் நிச்சயமாக இயேசு கிறிஸ்துவின் வழியாக நிறைவைப் பெறும். தூய ஆவியானவர் அதை நோக்கி வழிநடத்திக்கொண்டிருக்கிறார், தொடர்ந்து வழிநடத்துவார். இன்று உலகில் இருக்கின்ற போர், கொலை, கொள்ளை, தீச் செயல்கள் 2000 ஆண்டுகளுக்கு முன்பாகவும் இருந்தன. அறிவியல் முன்னேற்றத்தாலும், புதிய, நுட்பமான, ஊடக மற்றும் தகவல் தொடர்புச் சாதனங்கள் அதிகமாக இருப்பதாலும், உலக மக்கள் தொகை 2000 ஆண்டுகளுக்கு முன் இருந்ததை விட பல மடங்கு அதிகரித்திருப்பதாலும் குற்றங்கள் அதிகரித்திருப்பது போலத் தோன்றுகிறது. ஆனால் உலகம் நிச்சயமாக மெல்ல மெல்ல கடவுளின் திட்டப்படி நிறைவாழ்வை நோக்கி நகர்ந்து கொண்டிருக்கிறது. அது ஒருநாள் நிறைவை அடையும். ஒருவேளை அன்றுதான் உலகம் முடியும் நாள் என்பது இறைவனின்



## புனித பாற்றிமா மாதாவின் புதுமைகள் 100வது ஆண்டு நிறைவையொட்டி செபமாலை மகிமை வழிபாடு.

யூகோன் மாநிலத்தின் டோஸ் நகரத்தின் புனித மேரி தேவாலயத்தின் பங்குத்தந்தையாகிய அருட் தந்தை அன்ரனி மரியதாஸ் அவர்களால் காலை 9.00மணி தொடக்கம் மாலை 6.00 மணி வரையும் ஸ்காபறோ மிசனில் நடைபெறும். பற்றிமா மாதாவின் சரித்திர சாட்சியங்கள். செபமாலை, தியானங்கள் நற்கருணை வழிபாடும் திருப்பலியும் நிறைவேற்றப்படும். இவற்றில் பங்கு கொண்டு பயனடையுமாறு அன்புடன் அழைக்கின்றோம்.

## கனடாவிலுள்ள தமிழ் சமுகத்திற்கு ஆரம்ப குருவாக அருட் தந்தை பற்றிக் ஞானப்பிரகாசம்

1965ம் ஆண்டு தொடக்கம் 1971ம் ஆண்டு வரையும் திருவுளச்சபையின் குருமாணவராக கனடாவில் வருகை தந்து படித்த பின்பு அவரின் சொந்த இடமாகிய அச்சுவேலியில் புனித சூசையப்பர் தேவாலயத்தில் 1973 ஆடி மாதம் 12ம் திகதி குருவாக யாழ் ஆயர் தியோகுப்பிள்ளை அவர்களால் திருநிலைபடுத்தப்பட்டார் இலங்கையில் யாழ் மறை மாவட்டத்தில் மிருசுவில் பங்கிலும் முகமாலையிலும் பணிபுரிந்தார். 1985ம் ஆண்டு தமிழ் கத்தோலிக்க மக்கள் மொன்றியலில் வாழ ஆரம்பித்த காலந்தொட்டு அங்கு சில வருடங்கள் பணிபுரிந்து ரொறொன்ரோவில் தமிழ் கத்தோலிக்க மக்கள் வாழ்வு ஆரம்பிக்கும் காலத்தில் 1989ம் ஆண்டு ஆனி மாதம் ரொறொன்டோவுக்கு வருகை தந்து ரொறொன்ரோ மேற்றாசன திருமண வாழ்வு மீள் ஆய்வு அலுவளராகப் மறைமாவட்டத்தில் பணியாற்றிக் கொண்டு புலோர் டவுறின் புனித அந்தோனியார் திருவிழாவை சிறப்பபாக் கொண்டாடி அந்தத் திருவிழாவில் தமிழ் திருப்பலி எக்கிலின்ரன் கெனடியில் அமைந்துள்ள மரியகொறற்றி தேவாலயத்தில் நடைபெறும் என்று அறிவித்து முதல் முறையாக நடந்த முதல் மக்களின் திருப்பலியில் 13 தமிழ் மக்களுடன் தமிழ் திருப்பலியை ஆரம்பித்தார் அருட் தந்தை இராஜரெட்ணம் தமிழ் மக்களின் பிரிவை பொறுப்பேற்றதன் பிறகு புனித மொனிக்காத் தேவாலயத்தில் கடமை புரிந்து மீண்டும் மரிய கொறற்றி வருகை தந்து பணி புரிந்து அங்கு இருந்து புனித திரேசா மிட்லன் தேவாலயத்தில் கடமையாற்றினார் மீண்டும் மரியகொறற்றியில் கடமை புரிய தமிழ் மக்களுக்காக 2005ம் ஆண்டு வரையும் பணிபுரிந்தார். அதன் பிறகு கடந்த பன்னிரெண்டு வருடங்கள் குழந்தை இயேசுவின் தேவாலயத்தில் பணியாற்றிய அருட் தந்தை பற்றிக் ஞானப்பிரகாசம் அவர்கள் 2017ஆண்டு ஆனி மாதம் தொடக்கம் மாக்கம் எல்ஸ்மெர்யாரில் உள்ள தோமாஸ் மோர் தேவாலயத்தில் இறைபணிபுரிய மாற்றலாகியுள்ளார் என்பதை இத்தால் அறியத்தருகிறோம் இவர் தமிழ் கத்தோலிக்க மக்களின் தேவை அறிந்து அன்று முதல் இன்று வரை தேவையேற்படும் பொழுதெல்லாம் உடனே தன்னை முழுமையாக அற்பணம் செய்து பணிபுரிந்து வருகிறார். அருட்தந்தை பற்றிக் ஞானப்பரகாசம் கனடாவில் பல ஆண்டுகள் தொடர்ந்து குருத்துவ இறைபணிபுரியும் ஒரு தமிழ் குருவானவர் ஆவார். எமது அடிகளாருக்கு கத்தோலிக்க சமுகத்தின் சார்பாக பாராட்டுகளையும் நன்றிகளையும் செலுத்துவதோடு தந்தையுடைய குருத்துவப் பணி சிறக்க தொடர்ந்து செபிப்போம்.

## யாழ் மறைமாவட்டத்தைச் சேர்ந்த அருட் தந்தை சாள்ஸ் கொலின் 27வது குருத்துவ நாள்

கடந்த 2016ம் ஆண்டு கனடா வருகை தந்து கடமையாற்றிக்கொண்டிருக்கும் அருட் தந்தை சாள்ஸ் கொலின் அவர்கள் இந்த 2017ம்ஆண்டு ஆடி மாதம் 31ம் திகதி 27வது குருத்துவப்பணியை நிறைவு செய்கிறார். அவருடைய பங்கு புனிதராகிய யாகப்பரின் 24வது நிறைவு திருவிழா திருப்பலியை லூர்து மாதா ஆலயத்தில் ஆடி மாதம் 30ம்திகதி அருட்தந்தை சாள்ஸ் கொலின் அவர்களின் தலைமையில் நிறைவேற்றப்பட்டது. அவருக்கு எங்கள் கத்தோலிக்க சமுகத்தின் சார்பாக பாராட்டுக்களையும் வாழ்த்துக்களையும் தெரிவிக்கின்றோம். இனிவரும் காலங்களிலும் அவருடைய குருத்துவப்பணி எம் கனடா கத்தோலிக் சமுகத்திற்கு கிடைக்க வேண்டுமென்று தொடர்ந்து செபிப்போம்.

வாழ்க வாழ்க எம் தந்தையே!

வளர்க வளர்க் உம் அருட்பணி!

உலகெங்குமே என்றுமே எந்நாளுமே!

உம் இறை பணி சிறக்குமே.

## மிட்லனிலும் மேரிலேக்கிலும் மடுமாதா திருவிழாவா?

இந்த கேள்வியை தமிழ் கத்தோலிக்க சமூக மக்கள் எழுப்பியுள்ள படியால் இதற்கு விளக்கம் தரவேண்டும் என்று இவற்றைப் பதிவு செய்ய விரும் புகின்றேன். கனடாவில் நான்கு தேசிய திருயாத்திரை ஸ்தலங்கள் உண்டு. அவற்றில் கியூபெக் மாநிலத் தில் மூன்று தேசிய திருயாத்திரை ஸ்தங்களும் ஒன்ராறியோவில் ஒரு யாத்திரை ஸ்தலமாகிய மிட் லன் யாத்திரை ஸ்தலமும் உண்டு. இவற்றில் உலகின் பல மொழி அல்லது நாட்டு பற்று உடை யவர்கள் தங்களின் சின்னங்களை தங்களை அடை யாளப்படுத்தி நெறுத்தியுள்ளார்கள் அவ்விதமே நாம் ஈழத்தமிழ் கத்தோலிக்க மக்களும் மிட்லன் தேசிய யாத்திரை ஸ்த்தலத்தில் தமிழ் ஈழத்தில் உள்ள இலங்கைத் தேசிய யாத்திரை தலத்தின் அடை யாளத்தை கனடா தமிழ் கத்தோலிக்க மக்களின் அடையாள மாக ஐந்து வருடங்களின் முன்பு மருத மடு அன்னையின் முகப்பு வடிவமான போட்டிக் கோவையும் மருத மடு அன்னையின் உருவச் சிலையையும் அங்கு நெறுத்தியுள்ளோம். அதற்காக நாம் அன்னை மரியாயின் மருத மடு விழா அங்கு கொண்டாடு வது என்பது இல்லை. நாம் இயேசு சபைக் குருக்களின் இந்த திருயாத்திரை ஸ்த்தலத் தில் வருடா வருடம் நாம் உலக சமாதானத்திற்கான மிட்லன் வேதசாட்சிகளின் நினைவாகவே வருகை தந்து ஒன்று கூடல் செய்கிறோம். ஆனால் மேரி லேக்கில் அது ஒரு அருள்நிறை மரியாயின் யாத் திரை ஸ்தலமாவதால் அங்கு நாம் மருத மடு அன்னையின் விழாவுக் காகவே ஒன்று கூடுகின்றோம் எப்படி யென்றால் ஆவணிமாதம் 15ம் திகதி கத்தோ லிக்க திருச்சபை உலகம் முழுவதும் அன்னை மரியாளின் ஆரோகணத்திருவிழாவைக் கொண்டாடு கிறது. அன்றைய தினம் இலங்கையிலும் மருத மடு அன்னையின் விழா ஒரு தேசிய திருவிழாவாக இலங்கை நாடு முழுவதும் உள்ள இறைபக்தர்கள் ஒன்று கூடி கொண்டாடுகிறார்கள். ஆகவே நாங்க ளும் அப்பெருநாளை முன்னிட்டு மேரிலேக்கில் அன்னையின் ஆரோகணத்திருவிழாவை மருதமடு அன்னையின் விழாவாக ஆவணிமாதம் 15ம் திகதிக் குப் பின் வரும் சனிக்கிழமையில் கொண் டாடுகின் றோம் ஆகவே மேரிலேக்கில் கொண்டாடப் படுவது மருத மடு அன்னையின் விழாவாக கொண்டாடப்படு கின்றது. இதேவேளை யூலை மாதம் முதலாம் திகதி இலண்டன் ஒன்ராறியோ யாத்திரை ஸ்தல மாகிய செபமாலை தாசர் இல்லத்தில் கடந்த ஐந்து வருடங்கள் மருத மடு அன்னையின் விழா கொண்டா டப்படுகின்றது. இந்த விழா இலங்கையின் மருத மடு அன்னையின் விழா ஆடிமாதம் 2ம்திகதியும் கொண்டாப்படுகின்றது. ஆனால் 2ம் திகதி என்றால் இங்கு ஆடி மாதம் முதலாம் திகதி கனடாவின் தேசிய நாளாக உள்ளபடியால் நாம் அந்த நாளில் கடந்த ஐந்து வருடங்களாக செபமாலை தாசர் யாத்திரை ஸ்தலத்திற்குச் சென்று ஆடி

மாதம் 1ம் திகதி இலங்கை தேசிய திருயாத்திரையாகிய மருதமடு அன்னையின் திருவிழா கொண்டாடினோம். கடந்த நான்கு வருடங்களையும் விட இந்த வருடம் இறைபக்தர்கள் தன்னார்வமாக வருகை தந்து பங்கு கொண்டு சிறப்பித்தது பக்தர்களுக்கு ஆசீர்வதமா கவும் மகிழ்ச்சியாகவும் இருந்தது. செபமாலை தாசர் அருட்தந்தையர்களுக்கு எமது நன்றிகளும் பாராட்டுக் களும் தெரிவிக்கின்றோம். செபமாலை தாசர்களின் பணி சிறக்க வேண்டுகிறோம்.

## கண்ணீர் அஞ்சலி திரு. செல்வா பெனாண்டோ ராஜசேகரம் அவர்களுக்கு

எனது நண்பன் சேகர் அவர்கள் ஊர்காவற்றுறை மேற்கு சந்தியோகுமையோர் தேவாலய பங்கைச் சேர்ந்தவர். இவர் 1972ம் ஆண்டு நான் அவரது பங்கில் இருந்த அருட் தந்தை ஹென்றி மோறோ அவர்களுடன் ஒரு வருடம் அவருடன் இருந்தேன். அப்போது சேகர் எனக்கு அறிமுகமானார் அன்று தொட்டு அவர் இறக்கும் வரையும் ஒரு நல்ல நண்பனாக இருந்தார். இவர் ரொறொன்ரோவில் 1988ம் ஆண்டு முதல் முறையாக புனித இரயப்பர் தேவாலயத்தில் நான் தமிழில் முதல் முறையாக பெரிய வெள்ளிக்கிழமை வழிபாடு நடாத்துவதற்கு ரொறொன்ரோ மறை மாவட்ட ஆயர் இல்லத்தில் ஆயரின் செயளாராக இருந்த (இப்போது புனித மரியகொறற்றி தேவாலாய பங்குத்தந்தையாக இருக்கும்) அருட் தந்தை எட்வின் கலகர் அவர்களி டம் அனுமதி பெற்றபோது சேகர் அவர்களின் உதவி நாடினேன். அப்போது அவர் தனது மேற்பார்வையில் இருந்த ஊர்காவற்றுறை மேற்கு ஊர் இளைஞர்களை இணைத்து அன்றைய தினம் நடைபெற்ற வழிபாட்டை அருட் தந்தை பொஸ்க்கோ அவர்களுடன் சிறப்பிக்க உதவி புரிந்தார். நாம் எதிர்பார்த்தது இருநூறு அல்லது முன்னூறு மக்கள் மட்டும்தான். ஆனால் வருகை தந்த மக்கள் ஆலயத்தை ஆயிரக்கணக்கில் நிரப்பினார்கள். இதன் பிறகுதான் ரொறொன்ரோவில் தமிழ் கத்தோலிக்க மக்கள் அதிகமானோர் உள்ளார்கள் என்று உணர்ந்த நாங்கள் இங்கு தமிழ் கத்தோலிக்க பணிகள் ஆரம்பிக்க முயற்சி செய்தோம்.எனது நண்பண் சேகர் தொடர்ந்து வாழ்ந்த காலத்தில் இறைபக்தியில் விசுவாசமானவராகவும், கத்தோலிக்க விழுமியங்களுக்கு விளக்கம் தேடுபவராகவும் நீதிக்கு குரல் கொடுபப்ராகவும், நன்மைகள் உண்மைகள் யாவருக்கும் யாவற்றிற்கும் சமத்து வமான செயல்களை செய்ய தலைமைதாங்கிய வராகவும் ஆலோசணைகள் கூற ஆர்வம் படைத்த வராகவும் விளங்கினார். இரண்டு வருடங்கள் தனது வருத்தத்தின் நிமித்தம் துன்பம் அடைந்திருந்தாலும் தனது விசுவாசத்தில் நெகிழாதவராக செபவாழ்வில் நிலைத்திருந்தார். இறைநம்பிக்கையில் உறுதியாக இருந்தார். இறப்பதற்கு முன்பு ஒரு வாரத்திற்கு முன்பு என்னை அழைத்து தனது இல்லம் வந்து தனக்காக செபிக்கும்படி கேட்டார். நாங்கள் நடாத்தும் திருயாத்திரை ஸ்தலங்களுக்கும் சிறப்பாக நடைபெறும் ஆன்மீகக் கருத்தரங்குகள். ஞானொடுக ' கங்கள் செபவழிபாடுகளிலும் குடும்பமாக வருகை தந்து பங்குபற்றி சிறப்பித்தார். அவருடைய ஆன்மா இளைபாற்றிக்காக செபிப்போம். அவரது அன்பு மனைவி மகனுக்கும் குடும்பத்தினருக்கும் எமது ஆழ்ந்த அனுதாபத்தையும் தெரிவித்து நிற்கிறோம்.

## கனடாக்கிளை திருகோண மலை மறை மாவட்ட தமிழ் மக்களின் ஒன்றியத்தின் ஒரு வருட நிறைவு

திருகோண மலை மறை மாவட்ட தமிழ் மக்களின் ஒன்றியம் கடந்த வருடம் ஆவணி மாதம் திருகோண மலை மறை மாவட்ட மறை ஆயர் இம்மனுவேல் நோயல் அவர்களின் கனடா வருகையின் பின்பு அவரின் விருப்பத்தின் பேரில் சென்ற வருடம் ஆவணிமாதம் மறை மாவட்ட பேராலய விழாவை முன்னிட்டு ஒன்று கூடி விழா கொண்டாடியதுடன் அவர்களும் ஒன்றியம் ஒன்றை அமைத்துக் கொண்டனர் அதன் விளைவாக இந்த வருடம் ஆடி மாதம் 22ம் திகதி 2017ம் ஆண்டு சனிக்கிழமை காலை 11.00 மணி அளவில் கனடா திருகோண மலை மாவடட்ட மக்கள் ஒன்று கூடி ஒரு வருட நிறைவையும் தேவாதாயின் திருவிழாவின் திருப்பலியை ஆரோக்கியப் பங்குத் தந்தை பீற்றர் ஜிற்றேன்திரன் அவர்களின் தலைமையில் புனித ஆரோக்கியப் பங்கின் ஆலயத்தில் சிறப்பாக நடாத்தினார். வருகை தந்த மக்கள் மன நிறைவுடன் ஒன்று கூடி திருகோண மலை மறை மாவட்ட எதிர்கால திட்டங்கள் பற்றியும் நன்மைகள் பற்றியும் உரையாடிய தன் பின்னர் விருந்து உபசாரத்திலும் பங்கெடுத்து சென்றார்கள். கனடாக்கிளை திருகோண மலை மறை மாவட்ட தமிழ் மக்களுக்கு பாராட்டுக்களும் நன்றிகளும்.

## கனடா மண்டைதீவு புனித இராயப்பர் ஆலய பங்கு மக்களின் திருவிழா

மண்டைதீவு புனித இராயப்பர் ஆலய பங்கு கனடா வாழ் மக்கள் 2017ம் ஆண்டு ஆடி மாதம் 29ம் திகதி மேரி லேக்கில் 14வது ஆண்டு திருவிழா திருப்பலியை கொண்டாடி மகிழ்ந்தார்கள் இவர்கள் ஆரம்பத்தில் புனித பேனார்ட் ஆலத்தில் ஆரம்பித்து கடந்த மூன்று வருடங்களாக மேரிலேக்கில் இத்திருவிழாவைக்கொண்டாடினார்கள். அவர்களுக்கும் எமது பாராட்டுக்களும் நன்றிகளும்.

## தமிழ் கத்தோலிக்க இணையத்தலம்

கடந்த முப்பது வருடங்களாக கனடாவில் கத்தோலிக்க சமூகத்தில் ஆற்றிவரும் பல பணிகளின் பயணாக எமது பணியை உலகின் எல்லாப்பகு திகளுக்கும் விரித்தியடைய புதிய மின் இணையத் தலம் உருவாக்கம் அடைகிறது அது வருகின்ற செப்பரம்பர் மாதம் தொடக்கம் எல்லோரும் பயன் படுத்த முடியும் அவற்றில் நடக்கும் நிகழ்வுகள், தமிழ்கத்தோலிக்க வெளியீடுகள் செபங்கள் கத்தோலிக்க இணையங்களின் தொடர்புகள் திருயாத்திரை கள் உங்களின் கருத்துக்கள் யாவும் பகிர்ந்கொள் ளலாம் இணையத்தின் பெயர் www.tamilcatholic.ca



மேரிலேக் தேவாலயம்

# வீரத்திருமகன் ஆயர் மேதகு யோசப் இராயப்பு



கடந்த ஞாயிற்றுக்கிழமை (09-07-2017) அன்று மதிப்புக்கும் மரியாதைக்கும் உரிய முன்னாள் மன்னார் ஆயர் மேதகு யோசப் இராயப்பு அவர்களைப்பற்றி அருள்திரு கலாநிதி வின்சன்ற் பற்றிக் அடிகளாரால் எழுதப்பட்ட "வாழுகின்ற ஒரு நாயகன்" என்னும் நூல், வணக்கத்துக்குரிய கலாநிதி சந்திரகாந்தன் அடிகளார் தலைமையில் மிகச் சிறப்பாக Scarborough இல் வெளியிடப்பட்டது.

அங்கு உரையாற்றிய Dr. சந்திரகாந்தன் அடிகளார் ஆயர் அவர்களின் சேவைகள் பற்றியும், அவரின் துணிச்சல் மிக்க முடிவுகள் பற்றியும் எடுத்துரைத்தார். மேலும் அவர் ஆயர்கள் வரிசையில் மிகவும் துணிச்சல்மிக்க, தொலைநோக்கு பார்வையுடன் கூடிய மனிதநேயம் மிக்க ஆயர் என்று புகழாரம் சூட்டினார். புத்தகம் மிகச் சிறப்பான முறையில் வடிவமைக்கப்பட்டுள்ளது என்றும் அவர் குறிப்பிட்டார்.

அதனைத் தொடர்ந்து திரு சன்னராசா, திரு குகன் ஆறுமுகம், திரு நடராசா வேலுப்பிள்ளை ஆகியோர் சிறப்புரை ஆற்றினார்கள். "வீரத்திருமகன் யோசப் ஆண்டகை" என்ற தலைப்பில் திரு. மதிதயன் அந்தோனிப்பிள்ளையால் கவிதை ஒன்றும் வாசிக்கப்பட்டது.

முதல் பிரதியை வான்மதி அந்தோனிப் பிள்ளை பெற்றுக்கொண்டார்.

இந்த புத்தக விற்பனை மூலம் பெறப்படும் அனைத்து நன்கொடைகளும் ஆயர் அவர்களால் ஆரம்பிக்கப்பட்ட "போரினால் ஊனமுற்றோர் அமைப்பு"க்கு வழங்கப்பட உள்ளது.

இந்த புத்தகத்தை பெற விரும்புவோர் எம்முடன் தொடர்புகொள்ளுங்கள்.

## வீரத்திருமகன் கவிதை

இராயப்பு பெற்றெடுத்த மாணிக்கமே
அருள் நெறி குன்றாத அற்புதனை
ஆடம்பரம் அற்ற ஜோசம் ஆண்டகையே நீ
ஆண்டுகள் ஆண்டுகள் வாழ்ந்திடணும்

உள்ளத்தில் இறைவனை நிலைநிறுத்தி
உதட்டினில் உண்மைகள் உரைத்துவந்து
உன்னத சேவைகள் புரிந்துவரும் இந்த
உத்தமன் நூறு ஆண்டுகள் வாழ்ந்திடனும்

மடுமாதா தத்தெடுத்த தவ புத்திரன் நீ
மலைபோன்ற தணிவுடைய மன்றாரின் வித்தகன் நீ
தத்தளித்த தமிழ் மக்களின் உரிமைகளுக்காய்
உயிர்விடவும் தணிந்துநின்ற வீரத்திருமகன் நீ

துணிவுக்கே துணைபோன இறை தூதன் ஐயா நீ
துஷ்டரை துணிந்து உதைத்த படு சூரன் ஐயா
சிந்தை இல்லா சில சிங்கள இனத்தவேசிகட்கு நீ
சிம்மசொப்பனமாய் இருந்த பெரும் சிங்கம் ஐயா

நீ ஊர்ரூராய் ஆற்றிய சேவைகளை உண்மை
கிறிஸ்தவர் எவருமே மறக்கவில்லை மாற்று
மதத்தினர் மனதிலும் நீ குடியிருந்து மறமலர்ச்சியை
எம் மண்ணில் விதைத்தவன் நீ

நெடுந்தீவு உவந்தளித்த பெரும் பொக்கிசம் நீ
தீவகத்தின் பெருமை சொல்லும் கடல் சித்திரம் நீ
சிப்பிக்குள் கண்டெடுத்த ஜாதி முத்து ஐயா நீ
தமிழ் மக்கள் எங்களின் பெரும் சொத்து ஐயா

எத்தனையோ சேவைகள் தமிழர்க்கு செய்தவன் நீ
ஒன்றல்ல இரண்டல்ல சொல்லிவிட அத்தனையும் உன்
புகழ் சொல்லுமையா நீ தமிழ் ஆயர்கள் வரிசையில்
பத்தோடு பதினொன்று இல்லை ஐயா நீ
ஒரு பத்தரைமாற்று தங்கம் ஐயா

தமிழ் ஆயர்கட்குள் துணிவுக்கு புகழ் பூத்த
புதுமைக் காவலன் நீ
கிறிஸ்தவர்களின் தமிழ்ப்பற்றினை பறைசாற்றிய தமிழ்
பண்ணிதன் நீ
ஒட்டு மொத்தத்தில் எம் கிறிஸ்தவர்களின் தமிழ் பாப்பரசர் நீ

சாரக்டுடன் சுனாமி வெள்ளத்தில் நீ செய்த உதவி எல்லாம்
இன்றும்
எம் கண்களில் சித்திரம்
சாதிமதம் பாராது பரிவுகாட்டிய உன் பாசத்தை வெல்ல
இன்னும்
பிறக்கவில்லை ஒரு பாத்திரம்
அங்கவீனருக்காய் நீ அமைத்த கருணை இல்லங்களே
உன்னுயர்
அன்பின் இலக்கணம்
இதன் மூலம் எம் மக்களின் மனதியில் பதிந்துவிட்டது உன்
உருவத்தின் ராஜமுத்திரை

உனக்குள் உள்ள அந்த வசீகர சக்திதான் என்ன என்ன
விசித்திரம்
ஐ நா வரை சென்று உரிமை குரல் எழுப்பிய உன் இன
உணர்வோ
மிக மிக அற்பதம்
வற்றிக்கானை கலங்கவைத்த உன் கடிதங்கள் தான் எத்துணை
காத்திரம்
இத்தென்னால் தான் உலகத்தமிழ் மக்கள் மனதில் உன்
நினைவுகள் என்றென்றும் பத்திரம்

"வாழுகின்ற ஒரு நாயகன்" என்ற உன்னை பற்றிய நூல்
வெளியீடு நல்லதொர் ஆரம்பமே
உன் சேவைகளை எழுதிவைக்க உனக்கு நூலகம் அல்லவா
நாம் கட்டிடனும்
அஞ்சாதநெஞ்சத்து ஆண்மகனே ஆளுமை கொண்ட தமிழ்
பாப்பரசே, உன் அன்பான சேவையை நாம் பெற்றிடவே நீ நூ
று ஆண்டுகள் ஆண்டுகள் வாழ்ந்திடனும்.

மதிதயன் அந்தோனிப்பிள்ளை

# புனித பத்திரேசியார் கல்லூரியின் 30ம் ஆண்டு நிறைவு விழா 24.06.2017 அன்று ஹில்டன் ஹொட்டலில் ஆடம்பரமாக கொண்டாடப்பட்டது.

சங்கத்தின் சங்கத்தின் தலைவரும் தொழில் அதிபரும் சமூக சேவையாளருமான திரு யூட் பிரன்சீஸ் தலைமையில் மிகவும் சிறப்பாகவும் ஆடம்பரமாகவும் கொண்டாடப்பட்டது பிரதம விருந்தினராக ஜேர்மாணியில் இருந்து வருகை தந்த பழைய மாணவரான அருட் தந்தை இம்மானுவேலும் கவுரவ விருந்தினர்களாக இங்கிலாந்தில் இருந்து வருகை தந்த பழைய மாணவரான டாக்கர் பூலோக நாதனும் மற்றும் பாரளமன்ற உறுப்பினரான திரு ஹரி ஆநந்த சங்கரியும் கலந்து கொண்டு சிறப்பித்தனர் இந்த விழாவுக்கு உலகின் பல பாகங்களில் இருந்தும் கனடாவின் பல பாகங்களில் இருந்தும் பழைய மாணவர்களும் நன்பர்களும் கலந்து சிறப்பித்தனர்








இந்த ஒன்று கூடல்பற்றி கருத்து தெரிவித்த சங்கத்தினர் தங்களது முப்பது வருட கால வரலாற் றில் இடம் பெற்ற இரண்டவது மிகப்பெரிய அளவிலான பழைய மாணவர்கள் கலந்து கொண்ட அற்புதமான நிழ்ச்சியென்று தெரிவித்தனர் சமிப காலமாக இடம் பெற்ற நிகழ்ச்சிகளை விட தற்போ தைய தலைவர் திரு யூட் பிரான்சீஸ் தலைமைகள் இடம்பெற்ற யாவும் மண்டபம் நிறைந்தாகவும் மிகவும் மகிழ்ச்சி கரமாகவும் இருந்ததாக புனித பத்திரே சியார் கல்லூரியின் பழையமாணவர்களும் நன்பர் களும் பெரும்மிதம் கொள்கிறார்கள் மேலும் யூட் பிரான்சீஸ் சேவியர் பிரான்சீஸ் கல்லூரியின் பழைய நீண்ட காலமாக சங்கத்தின் செயல் குழு உறுப்பினராகவும் கடைமையாற்றினவர் அது மாத்திரமல்ல கொழும்பு யாழ்பாணம் உட்பட புனித பத்திரேசியார் கல்லூரியன் பழைய மாணவர் சங்கங்களிலும் செயல் குழு உறுப்பினராக கடைமையாற்றிய பெருமைக்குரியவர் அவரின் வழியில் அவரின் புத்திரர் சங்கத்தை வழி நடத்தி வருவது சிறப்பு மிக்கது தலைவர் தனது உரையில் இந்த விழா சிறப்படைய ஒத்துழைத்த அனைவருக்கும் நன்றி கூறியதோடு எங்கள் சங்கம் இன்று இந்த ஐந்து நட்சட்சேத்திர விடுதியில் இந்த விழாவைக் கொண்டாடும் அளவுக்கு நாங்கள் வளர்ச்சிப் பாதையை நோக்கிப் போய்க்கொண்டிருக்கிறோம் தனது மகிழ்ச்சியை அரங்கில் தெரிவித்தார் விழாவில் சங்கத்தை ஆரம்பத்த ஸ்தாபகர்கள் திரு மதி தயன் அந்தோனிப்பிள்ளைக்கும் திரு கவிஞர் திரு ரவி அமிர்த வாசகத்திற்கும் காம் சென்ற பேனாட் செல்வநாயகத்திற்கும் வாழ்நாள் சாதனை யாளர் விருது வழங்கி எகாவுரவிக்கப்பட்டார்கள் அங்கு உரையாற்றிய முன்னால் தலைவர் பி எச் விஜயகுமார் திரு மதிதயன் கலைஞர் ரவி ஆகி யோரது தன்னலமற்ற சேவைகளையும் திறமைகளை யும் பாரட்டி இவர்கள் இருவரும் பண்முகத் தன்மை கொண்ட திறமைசாலிகள் என்று புகலாரம் சூட்டினார்

விருதுகளை முறைய சங்கத்தின் முதிய பழைய மாணவர்களாகிய திரு பிரான்சீஸ் சேவியர் திரு தோமாஸ் ஆகியோர் வழங்கிளார்கள் காலம் சென்ற பேனட் செல்லும் நாயகத்தின் விருதினை அவரின் அன்பு சகோதரி திமதி லீனா சந்திரறாஜன் பெற்றுக ்கொண்டார்

அங்கு உரையாற்றிய திருமதி லூனா சந்திரறாஜன் சங்கத்தின் ஸ்த்தபர்களான மதிதயன் அற்தோனிப் பிள்ளை ரவி அமிர்தவாசகம் ஆகியோரின் தன்னள மற்ற சேவையையும் அவர்கள் தங்களுடன் இருந்த சங்கத்தை ஆரம்பித்த தனது தம்பி பேனாட்டை நினைவு கூறுவதையிட்டு பெருமையடைவதாகவும் அத்தோடு எனது தம்பி எகாவுரவித்த புனித பத்திரே சியார் பழையமாணவர் சங்கத்திற்கும் அதன் சகல உறுப்பினர்களுக்கும் அதன் முன்னால் தலைவருக் கும் அதன் தற்போதைய தங்கள் திரு யூனோட் பிரானசிஸ்சுக்கும் தனது மனப்பூர்வமான நன்றியை தெரிவித்துக்கொடார்

விழாவின் கல்லூரியின் பிரபலியம் மிக்க விழாவில் ஆசிரியரகளாகிய சேவியர் சீமான்பிள்ளை மற்றும் அல்பிறேட் சந்தியாப்பிள்ளை ஆகியோர் எகாவுர விக்கப்படடார்கள் அங்கு இவர்களை உரையாற்றிய சங்கத்தின் செயற் குழு உறுபப்பினாராகிய பிலிப் பிறான்சீஸ் ஆசிரியர் இருவரும் இருபத்தைந்து வருடங்களுக்கு மேலாக ஆசிரியராக கடைமை யாற்றிய வெள்ளி விழா நாயகர்கள் என்று குறிப்பிட் டார்கள் திரு சேவியர் சீமான்பிள்ளை ஒரு திறமை யான ஆசிரியர் இவர் முப்பது ஆண்டுகளுக்கு மேலாக கடமையாற்றிய வெள்ளி விழா நாயகர் களுல் ஒருவர் இவர் புனித பத்திரேசியார் கல்லூ ரி யில் கல்வி கற்று விஞ்ஞான பீடத்திற்கு தெரிவாகி கல்வி கற்று மீண்டும் கல்லூரியில் உயர் வகுப்பு மாணவர்களுக்கு எபாவுதிகம் கணிதம் போன்ற பாடங்களை கற்பித்து சிறந்த பெருபேறுகளை மாணவர்கள் பெற வழி வகுத்தவர் அத்தோடு இருபது வருடங்களுக்கு மேலாக (Prefect of gams ) ஆகக் கடமையாற்றி விளையாட்டுத் துறைக்கு பெரும் பங்கு ஆற்றி






சிறந்த விளையாட்டு வீரர்களை உருவாக்கினார் இதைத் தொடர்ந்து கல்லூரியின் பழை மாணவர்களும் பாடகர்களும் திரு யூட் நிக்கிலஸ் திரு அன்ரனி அநந்தன் ஆகியோர் தமிழில் பாடல்களைப்பாடி அனைவரின் பாரட்டைப் பெற்றுக்கொண்டார்கள் இதைத் தொடர்ந்து இடம் பெற்ற "samsack" னுது இசைக் குழுவினரின் அட்டகாசமான இசை அணைவரையும் நடனமாட வைத்து மகிழ்ச்சி கடலில் ஆழ்த்தியது

30ம் ஆண்டு நிறைவு நிகழ்ச்சி மிக சிறப்பாகவும் மன நிறைவுடன் அமைந்ததாகவும் பலரும் பாராட்டி இருந்தார்கள் அவர்கள் சிலர் இங்கு கனடாவிலும் தனது சல்வி சேவையை ஆற்றிவருகிறார். இங்குள்ள உயர் வகுப்பு மாணவர்களுக்கு கணிதம் பௌதிகம் போன்ற பாடங்களில் அடிப்படை அறிவால் இருந்து பரிச்சைக்கு தயார் படுத்தும் வரை ஒரு சிறப்பான கற்கை நெறியை தனக்கே உரிய பானியில் தயாரித்து இலகுவான முறையில் மாணவர்கள் மனதில் பதியும்படி செய்வதில் கை தேந்தவர் இவரிடம் கல்வி கற்ற மாணவர்கள் கனடாவில் வைத்தியர்களாவும் தொலில்நூட்பவியளார்களாவும் இருப்பது குறிப்பிடத்தக்கது மேலும் இவர் கனடவின் விளம்பரப்பத்திரிகையில் கடந்த பதினைந்து வருடங்கள் கனிதம் பௌதிகம் பற்றிய தரவுகளை எழுதி வருகிறார் மேலும் சங்கத்தின் உபதலை வராவும் செயற்குழு உறுப்பினராகவும் கடைமை யாற்றிய பெருமைக்குரியவர் திரு அல்விறேட் சந்தியாப்பிள்ஜளை ஆசிரியர் மாத்திரமல்ல இவர் ஒரு சிறந்த மெய் வல்லுணரும் சிறந்த விளையாட்டு வீரரும் ஆவார் இவர் சிறந்த புனித பத்திரேசியார் கல்லூரியில் கற்று டுழனெழெ யுனையஉெந டுளநட சித்தி அடைந்தும் அவரது திறமையை கல்லூரிக்கு பயன் படும் வகையில் அப்போதைய கல்லூரியின் அதிபராக வணக்குத்துக்குரிய அருட் தந்தை ஜீவரெட்ணம் அடிகளாரின் அன்பான அழைப்பை ஏற்று கல்லூரியின் உயர் வகுப்பு மணவர்களுக்கு ஊநஅளைவசல ரூ டீழைடழபல போன்ற பாடங்களை முப்பது வருடங்களுக்கு மேலாக கற்பித்த ஒரு வெள்ளி விழா நாயகன் இவர் கல்லூரி கலங்களில் நிர்வாகம் மிக்க தகைமை மாணவராக கடைமையாற்றிவர் இவர் ஆசரியராக இருந்த காலத்தில் மெய் வல்லுணர் பிரிவிக்கு (சநகநஉவ ழக பயஅள ) ஆக பணியாற்றிய பெருமைக்குரியவர். இங்கு கனடாவில் பழைய மாணவர் சங்கத்திற்கு தலைவராக இருந்தபொழுத முதன் முதலில் சங்கத்தை சட்டபூர்வமாக்கிய பெருமைக்குரியவர். கனடாவில் சங்கத்தினால் நடத்தப்படும் சகல நிகழ்ச்சிகளிலும் எந்த சூழ்நிலைகளிலும் என்ன தடைகள் இருந்த பொழுதிலும் தவறாது சமூகம் அளித்து தனது அன்பை உறுதி செய்யும் ஒரு மதிப்பிக்க கல்லூர்ா் பக்திமான்.இவரது முன் மாதிரி சகல பழைய மாணவர்களுக்கும் ஒரு முன் உதாரணமாகும்.

(இவரது கல்வி சேவைளை பாராட்டி இவரை ஆசிரியர் சேவையில் Grade 1 Specil post ஆக உயர்த்தப்பட்டார்)

தொடர்ந்து சங்கத்தின் ஸ்தாபர்களாகிய மதிதயன் அந்தோனிப்பிள்ளையும் ரவி அமிர்தவாசமும் சங்கத் தின் முதல் தலைவர் திரு.ரேமன் சந்தியாகோவிற் கும் முதல் செயற்குழு உறுப்பினர்களாகிய திரு, ஞானசிங்கம் .திரு.ஜோ .சுவாம்ம்பிள்ளை .திரு.கரு ணாகரன் .திரு.குணராஜசிங்கம் ஆகியோருக்கும் பொன்னாடை போர்த்தி கௌரவித்தார்கள்.

இதைத் தொடர்ந்து இடம் பெற்ற இசை விருந்தில் எங்கள் சங்கத்தின் செயற்குழு உறுப்பினர்களாகிய திரு.டோனி அமிர்தநாதன்.திரு. பிலிப் பிரான்சிஸ் ஆகியோரின் பிள்ளைகளினால் வழங்கப்பட்ட இசை நிகழ்ச்சி அனைவரையும் ஆச்சரியத்திலும் பலவசத்திலும் ஆழ்த்தியது குறிப்பாக அமெரிக்காவில் இருந்து வருகை தந்த பழைய மாணவர்களாகிய வைத்தியர் ஜோ.மேனுவல் பிள்ளையும் அவருடைய பாரியாரும் இந்த இளையோரின் இசைத் திறமையை வெகுவாக பாராட்டினார்கள்.இதை ஒருங்கிணைத்த பெருமை திரு.டோனி அமிர்தநாதனையே சாரும்.

மிகவும் அருமையாகவும் மனமகிழ்ச்சியாக வும் அமைந்திருந்தது. படம்....இவ்வளவு சிறப்பாக நடக்கும் என தான் எதிர்பார்க்கவில்லை. தனது பழை மாணவர்கள் ஆசிரியர்கள் நண்பர்கள் அனைவரையும் ஒரே இடத்தில் சந்திக்க வைத்த சங்கத்திற்கு எனது நன்றி.

மிக சிறப்பாக நெறிப்படுத்தி இருந்தார்கள். நானும் எனது மனைவியும் மிகவும் சந்தோஷமாக அந்த மாலைப் பொழுது அமைந்திருந்துத அனைத்து மாணவர்களையும் ஒன்று திரட்டிய பழைய மாணவர்களுக்கு நன்றி.

முப்புத வருடங்களுக்கு முன்பாக தங்கள் கல்லூரியின் பழைய மாணவர் சங்கத்தை அமைத்த ஸ்தாபகர்களுக்கு முப்பதாவது வருட விழாவை திறம்பட நெறிப்படுத்திய நண்பர் ஜீனோட் பிரான்சிஸ்க்கும் வாழ்த்துக்கள்.






**Golda Muthurajah**
Sales Representative
Cell: 647.708.7083
golda.kana@gmail.com

HomeLife/Future
Realty Inc.,Brokerage,
Bus : 905.201.9977
Fax: 905.201.9229
205-7 Eastvale Dr., Markham Ont. L3S 4N8

---

வீடு வாங்க விற்க
Free Home Staging
Free Market evaluation
Friendly service.

**MOHAN NADARAJAH**
HOMELIFE/FUTURE REALTY INC, BROKERAGE*
DIR:-416-520-2587

---

**Paul Healthy Life Clinic**
HOMEOPATHY & ACUPUNCTURE

**Paul Joseph,** B.H.M.S.(India), R.Ac., R.Hom(Canada)
*(Bachelor of Homeopathic Medicine and Surgery)*

1193 Brimley Road, Scarborough, Ontario M1P 3G5
Tel: 416 438 3939 Cell: 416 986 4903 Fax: 416 438 3909
www.newhealthcare.ca e-mail:drjp63@yahoo.com

---

**Richard Alfred,** C.E.T
Real Estate Sales Representative
Direct:
416-432-4322
richard.alfred@century21.ca
www.century21.ca/richard.alfred

Century 21
INNOVATIVE REALTY INC.
Tel: 416-298-8383 Fax: 416-298-8303
3-2250 Markham Rd. Toronto ON. M1B 2W4

Reach
Richard for 3R
Real Estate Needs
www.3rhomes.com

---

**Siva Nagamany**
Sales Representative
Cell: 647-289-0091
Off: 905-201-9977
Fax: 905-201-9229
Email : home4sales@hotmail.com

HOMELIFE/FUTURE REALTY INC., BROKERAGE*
7 Eastvale Dr, Unit #205, Markham, ON L3S 4N8
*Independently owned and operated

---

RE/MAX ACE
REALTY INC. BROKERAGE INDEPENDENTLY OWNED AND OPERATED

**VAHEESAN**
JEYAVEERASINGAM
Sales Representative
vaheesan@vaheesanhomes.com
vaheesanhomes.com

Dir: 416 276-9999

3-1286 Kennedy Rd,
Toronto,ON.
M1P 2L5
416.270.1111
416.270.7000

---

**SHAN**
**THAYAPARAN**
Sales Representative
Dir: 416.567.7675
Bus: 416.321.2228
www.shan123.com

Long name, Amazing results!!!

Re/Max Vision Realty Inc. Brokerage
INDEPENDENTLY OWNED & OPERATED

---

நந்தா உணவகம்
NANTHA CATERS
Sri Lankan & Indian Food

BEST CATERS IN TOWN
சிறந்த முறையில் தயாரித்த அறுசுவை உணவுகளை அனைத்துவித வைபவங்களுக்கும் பெற்றுக்கொள்ளுங்கள்
இப்பொழுது 3 இடங்களில்

Catering, Bakery & Take Out

Brimley & Steeles - 4915 Steeles Ave.E | Warden & Finch - 3268 Finch Ave.E
Kippling & Steeles - 5010 Steeles Ave. |
Call 416 NANTHA 1 - 416 626 8421

---

**TDOT DRIVING SCHOOL**
BUS: 416-320-0202
www.tdotdrivingschool.ca
20 NEW DELHI DRIVE, UNIT 77, MARKHAM ONT L3S 0B5

**SEKAR KANAMOORTHY** (GENERAL MANAGER)
(MTO APPROVED IN-CAR INSTRUCTOR)
CELL: 416-587-5843

---

**RAMESH**
RAJALINGAM
Direct : 416.568.4409
Office : 416.321.2228
ramesh.rajalingam@gmail.com

ROYAL LEPAGE Vision Realty
Brokerage
INDEPENDENTLY OWNED AND OPERATED
2210 Markham Road, #1 Toronto, ON. M1B 5V6

கனடா தமிழ் கத்தோலிக்க ஆன்மீக பணியகம் ஒழுங்குபடுத்தியுள்ள

றோம் வத்திக்கான், பதுவை இத்தாலி, மயூக்கோறி பொஸ்னியா, பிறாக்கு ஷெக்கோ

13 நாட்கள்

# அறிவுக்கும் ஆன்மீகத்திற்கும் திருயாத்திரை

$2900.00 மட்டுமே

திரு. டேவிட் தோமஸ் அவர்களின் தலைமைத்துவத்தில்

ஆகஸ்ட் 27, 2017 இற்கு முன் முற்பதிவுசெய்து ஏமாற்றத்தைத் தவிர்த்துக்கொள்ளுங்கள். பதிவுக்கட்டணம் $300.00.







## செப்டம்பர் 14 TO 26

## பார்வையிடும் இடங்கள்

ஷெக்கோ: குழந்தை இயேசு ஆராதனை ஆரம்பித்த இடம்

பொஸ்னியா: மயூக்கோறி 1981ம் ஆண்டு தொடக்கம் இன்று வரை மாதா காட்சி கொடுத்துக்கொண்டிருக்கும் இடம்

இத்தாலி: பதுவை அந்தோனியார் வாழ்ந்து மரித்த பிறகு இன்று வரை அழியாத நாக்கு உள்ள இடம், அசிஸி பதுவை அந்தோனியாருக்கு புனித பட்டம் வழங்கப்பட்ட இடம், உலகில் மிக அழகான வெனீஸியன் குட்டித்தீவு, பிசா சாய்ந்த கோபரம், றோம் கொலோசியம், வற்றிக்கான் நகரம், பவுல் கல்லறை, செபஸ்றியார் கல்லறை, மரியா பசிலிக்கா, யூவானியார் பசிலிக்கா, றோம் பழைய நகரம்.



Venetian Island






St Antony Padua

கனடா தமிழ் கத்தோலிக்க ஆன்மீக பணியகம்
2625 Eglinton Ave East Scarborough, ON M1K 2S2
TEL: 416 -265-5540
FAX: 416-264- 6353